# மக்ளீன்ஸ்

## உபயோகித்து
## அந்த அதிகமான வெண்மையைப்
## பாருங்கள்!

### இவ்விதம் சோதியுங்கள்



1. உங்கள் நாக்கினால் பற்களைத் தடவுங்கள். அவற்றின் மேலுள்ள பாசியை உணர்கிறீர்களா?
2. இப்போது, மக்ளீன்ஸ் பற்பசைகொண்டு பற்களைத் தேயுங்கள். அது பற்களைச் சுத்தம் செய்து, வெண்மையாக்கிக் காப்பதுடன் உங்களுக்குப் புதுமையான உணர்ச்சியை அளிப்பதை உணர்வீர்கள்.
3. அந்த அதிகமான சுத்தத்தை உணருங்கள்... அந்த அதிகமான வெண்மையைப் பாருங்கள்.




மக்ளீன்ஸ் பழுப்பு நிறமடைந்த பற்களை வெண்மையாக்குகிறது!

# கல்கி

## பொருளடக்கம்

சோபகிருது, மார்கழி 7 ○ டிசம்பர் 22



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



பட விளக்கம் 57ம் பக்கம் பார்க்க

# தீயினால் சுட்ட வடு மாறுது

புகைபிடிப்போருக்கு அழகு, பற்ற வைத்த சிகரெட்டை மேஜை போன்ற சாமான்கள் மீதோ, அலங்காரப் பொருள்களை ஒட்டியோ வைக்காமலிருத்தலே. சாம்பலைப் போக்குவதற்கு ஆஷ்ட்ரே இருக்க, வீணே மேஜை மீது தீய்ந்த வடுக்களையும், பளபளப்பான தளங்கள் மீது பழுப்பு நிறக் கவடுகளையும் விளைவிப்பானேன்?




உயரிய பண்போடு உபயோகிப்பதற்கும் உதவுவதற்கும் உகந்தது

**பனாமா**

Panama

20

CIGARETTES

இழுக்க இழுக்க இன்பம்– இறுதிவரை

விசேஷக் கலவை செய்வோர்:
கோல்டன் டுபாக்கோ கம்., ப்ரைவேட் லிட்.
பம்பாய்-56.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT. 668 TAM — Greens' Advtg.



மலர் 23 ❁ தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் ❁ இதழ் 21

# முதன்மந்திரி ஏமாற்றிவிட்டார்!

ஸ்ரீ பக்தவத்ஸலம் அவர்கள் முதன் மந்திரிப் பதவி ஏற்றபோது, போதனை மொழி விஷயத்தில் ஆங்கிலத்தின் அவசியத்தை உணர்ந்துள்ளவராகக் காட்டிக் கொண்ட அவர் ஆட்சிமொழி விஷயத்திலும் இதே விவேக முடிவைப் பின்பற்றுவார் என்ற நம்பிக்கையைத் தெரிவித்திருந்தோம். 'ஒரு தவற்றைக் கைவிட மனமில்லாமல் இன்னொரு தவற்றைக் கொண்டு அதைக் காக்க ஸ்ரீ பக்தவத்ஸலம் முற்படமாட்டார் என்றும் அவருக்கு அந்த அளவுக்கு அறிவும், நல்ல பகுத்தறிவும் உண்டு' என்றும் ராஜாஜி நம்பினார். முதன்மந்திரி அவர்கள் இந்த நம்பிக்கையை எல்லாம் பொய்யாக்கி விட்டார்.

ஸ்ரீ பக்தவத்ஸலம் தமது கட்சியிடம் அத்யந்த விசுவாசத்துடன் இருப்பதை யாரும் ஆட்சேபிக்கவில்லை. இருந்த போதிலும் தமது ராஜ்ய மக்களின் நலன்களை மேலிடத்துக்கு எடுத்துக்கூடக் காட்டாமல், ஆட்சிமொழி விஷயத்தில் அவர் 'ததாஸ்து' சொல்வார் என்று நாம் எதிர்பார்க்கவேயில்லை.

ஆங்கில மொழி பிரிட்டிஷார் ஆட்சியைத் திரு பக்தவத்சலத்துக்கு நினைவுறுத்து கிறது என்றால் நமக்கோ ஹிந்தி மொழியானது முகலாய ஏகாதிபத்தியத்தை ஞாபக மூட்டுகிறது. முகலாய ஆட்சியில் மனம் கசந்து, அதற்குக் 'கும்பெனி' ஆட்சி சிலாக்கிய மானது என்றே அந்தக் காலத்தில் நாடு கருதியதைச் சரித்திரம் உணர்த்துகிறது. இல்லாவிடில் ஆறாயிரம் மைல்கள் கடந்து வந்த கம்பெனிக்காரர்கள் இங்கு நடை பெற்ற முகலாய ஆட்சியைத் தகர்த்திருக்க முடியாதல்லவா?

முதன் மந்திரி ஆங்கிலத்துக்கு 'அந்நிய'ப் பட்டம் கிளிப்பிள்ளைப் பாணியில் சூட்டு கிறார். 'அந்நியம்' என்பது இருபுறமும் கூரான ஒரு கத்தி என்பதை அவர் மறந்து விட்டார். ஆங்கிலம் இந்தியாவுக்கு அந்நியம் என்றால், ஹிந்தியோ தென்னிந்தியாவுக்கு அதைவிட மிகவும் அந்நியமாகும். நாட்டு வாழ்வில் முக்கியமான பங்கு கொண்டவர் களுக்கெல்லாம் ஆங்கிலம் அந்நிய மொழியே அல்ல. இன்று நமது அரசியல், பொருளா தாரம், பண்பாடு, கல்வி எல்லாவற்றையும் தாங்கும் தூணாகவும், காக்கும் அரணாகவும் உள்ளது ஆங்கிலேய மரபுதான். ஆட்சிமுறை, நீதிமுறை, கல்விமுறை எல்லாவற்றிலும் அந்நியர்களைப் பின்பற்றிப் பயன்பெறும்போது, இத்தனை காலமாக நமக்குப் பயனளித்து வந்த ஆங்கில மொழியை மட்டும் ஏன் புறக்கணிக்க வேண்டும்? உலக நாடுகள் நெருங்கி வரும் இந்த அணுயுகத்தில் அனைவரும் ஆங்கிலம் கற்கவேண்டும் என்று ஆட்சியாளர் களே ஒப்புக்கொள்கிறார்கள். அப்படியிருக்க ஹிந்தி எதற்கு? மண்ணெண்ணெய்மேலில் வெறுப்புக் கொண்டு அறிவு விளக்கை அணைத்தபடியாகும்.

உணர்ச்சிகளைக் கிளறிவிட்டு, இது அயல் சரக்கு என்று விரட்டப் பார்ப்பது நல்லதல்ல. சர்வதேச இணைப்பு மொழியான ஆங்கிலத்தை யாரும் பயில வேண்டும் என்று சொல்லும்போது, அதே மொழி இந்தியாவில் எல்லா ராஜ்யங்களிடையேயும் பொது மொழியாக இருப்பதைச் சிதைத்து, ஹிந்தியை அதன் இடத்தில் புகுத்த எண்ணுவது துளிக்கூட அவசியமில்லாத முயற்சி. 'அந்நியம்' என்ற அடைமொழி ஹிந்திக்காரர்களுக்கு ஆங்கிலத்திடம் வெறுப்பை உண்டாக்குமானால், அதைவிடத் தீவிர மாகத் தென்னிந்தியர்களின் மனக்கசப்பை ஹிந்தி என்ற அந்நிய மொழி ஏற்

படுத்தும். 'அயல் சரக்கு' என்று கூறி ஆங்கிலத்திடம் வெறுப்பைக் கிளப்பப் பார்க்கிறவர்கள் உண்மையில் வடக்கு தெற்கு எதிர்ப்பையும் கிண்டி விடுகிறார்கள். மொழியின் தோற்றுவாயை வைத்து 'அந்நியம்' என்று நிர்ணயித்து விடமுடியாது. இன்று நடைமுறையில் நிரந்தரமாகிவிட்ட உண்மைகளை வைத்துத்தான் நிர்ணயிக்க வேண்டும். ஆங்கிலம் இங்கு வேரூன்றி இரு நூறாண்டுகள் ஆகிவிட்டதை முதன் மந்திரி அவர்கள் நினைத்துப் பார்க்க வேண்டும்.

தமிழ்நாட்டு மக்களின் விருப்பத்துக்கும், அவர்களுடைய எதிர்கால நலனுக்கும் விரோதமான முறையில் நடைபெறும் ஹிந்தித் திணிப்பை முதன் மந்திரி எதிர்க்காவிடினும் குறைந்த பட்சம் அதைக் காக்கவாவது முன் வராமலிருப்பாராக. ஆட்சி மொழி விஷயமாக மௌனமாக இருந்து, ராஜ்யத்திலுள்ள நல்ல அதிகாரிகளின் துணையுடன் நேர்மையான நிர்வாகம் நிலைப்படத் தமது நேரத்தைப் பூரணமாகப் பயன்படுத்துவாராக! இதில் எல்லோரும் மனமார்ந்து உதவுவார்கள்.

# உள்ளம் உருகாதா?

பூவத்தூர் அச்சுதனும் (வயது 50) அவரது மனைவியும் அறு குழந்தைகளும் கண்ணனூருக்கு அருகிலுள்ள சொவ்வா என்ற இடத்திலுள்ள தங்கள் வீட்டில் மரணமடைந்து பிரேதங்கள் கிடப்பது நேற்று தெரிய வந்தது. அச்சுதனின் சட்டைப் பையிலிருந்த ஒரு கடிதத்திலிருந்து, வறுமைக் கொடுமையால் அவர் இந்த முடிவை எடுக்க நேர்ந்தது எனத் தெரிகிறது. அவர் கண்ணனூரில் செல்வச் செழிப்புடன் வாழ்ந்த ஒரு நகை வியாபாரி. தங்கக் கட்டுப்பாட்டுச் சட்டம் அமுலான பின் சர்க்கார் கடன் பெற்று அவர் மூக்குக் கண்ணாடிக் கடை வைத்து நடத்திவந்தார்.

—ஹிந்து (டிஸம்பர், 4)

இதைப் போலத் தங்கக் கட்டுப்பாட்டுக் கொடுமையால் தங்கள் இன்னுயிரை இழந்த பலரைப் பற்றிச் செய்திகள் வந்தபடியேதான் இருக்கின்றன. ஆனால் இன்னமும் ஆட்சி பீடத்திலிருப்பவர்களின் இறுகிய இதயம் உருகவில்லை. என்றுமே உருகாதா?

பொருளாதாரத்தைப் புரிந்து கொள்ளாமல் நாட்டின் பொருட் செல்வத்தைப் பாழ்படுத்துவதோடு, செல்வத்துட் செல்வமாகிய உயிர்களை பிரஜைகள் தற்கொலை செய்து கொண்டு மாய்த்துக் கொள்ளும் அளவுக்கு மூடச் சட்டங்களை நிறைவேற்றி வருகிறார்கள். பணவீக்கம் காரணமாக நம் நாட்டில் ரூபாயின் மதிப்புக் குறைந்துகொண்டே வருகிறது. இது காரணமாக ரூபாயைத் தங்கமாக்கிக் கொள்ளும் ஆர்வம் பெருகுகிறது. நேர்மையான முறையில் இதைச் செய்யச் சர்க்காரின் கொள்கை உதவாததால், கள்ளக் கடத்தல் அதிகரிக்கிறது. இதைத் தவிர்க்க எண்ணி விதித்த புதிய சட்டங்



## ஊர் வம்பு




களால் கள்ளக் கடத்தல் குறையவில்லை. ஆனால் இச்சட்டங்கள் அருமைப் பொற்கொல்லர், நகை வியாபாரிகள் இவர்களின் உயிர்களைக் கொள்ளை கொண்டு போகிறது. நேர்மையான முறையில் தொழில் நடத்தி வந்தவர்களை அந்தத் தொழிலிலிருந்து அவர்களுக்குத் தெரியாத தொழிலில் ஈடுபடுத்துவதற்குக் கடன் உதவுவதால் பிரச்னை தீர்ந்து விடாது என்பதை இந்தப் பயங்கரச் சாவுகள் நிரூபித்து வருகின்றன. தாங்கள் காண முடியாத பரிகாரத்தை மரணத்தில் காண முடியும் என்று கருதிப் பல குடும்பங்கள் தற்கொலை செய்து கொள்ள அநுமதிப்பது தேசத்துக்கே அவமானமாகும். ஆனாலும், 'ஏக-கட்சி ஜனநாயகம்' நடத்தி வரும் தில்லி தர்பார் இன்று போலவே எதையும் இலட்சியம் செய்யாமல் கொடுங்கோன்மை புரிந்து கொண்டுதான் வரும்.

தெற்கு வியட்நாமில் புத்த பிட்சுகள் தற்கொலை செய்துகொண்டதைப் பற்றி நாமெல்லாம் நிறையப் பேசி வருகிறோம். ஆனால் நம் நாட்டிலேயே கட்டிய மனைவியுடனும், குழந்தை, குட்டிகளுடனும் உயிரை விடும் பாரதப் பிரஜைகளுக்காகச் சீறி எழுந்திருக்க யாரையும் காணோம்!

# என்ன சேதி?

### கோவாவில் தோல்வி

ராஜ்கோட், அம்ரோகா, பருகாபாத்து இவற்றுக்கும் மேலே போய் உச்சபீடம்தரும் வகையில் கோவா பிரதேசம் காங்கிரஸுக்குப் பாடம் கற்பித்து விட்டது. அதன் விளைவாக, உண்மையான ஜனநாயகவாதிகளுக்குப் புது நம்பிக்கை பிறந்திருக்கிறது. அத்துடன் எதிர்க் கட்சிகளுக்கு வோட்டளித்துக் காங்கிரஸுக்குப் பாடம் கற்பிக்கும் தைரியம் மக்கள் பெற்று வருகிறார்களென்பதும்

புலனாகிறது. ஆனால் எந்த அவமானத்தையும் விழுங்கும் ஜாலவித்தையைக் காங்கிரஸ் கற்றிருக்கிறது. கோவா தோல்வியையும் விழுங்கிவிடும்.

## பணிக்கரின் மறைவு

கடைசியாக மைசூர் சர்வகலாசாலையில் வைஸ் சான்ஸலராகப் பணியாற்றி வந்த ஸ்ரீ கே.எம். பணிக்கர் திடீர் என்று காலமானது பெரு நஷ்டமாகும். ஸ்ரீ பணிக்கர் மேனாடு சென்று படித்த கல்விமான். அத்துடன் தீவிர தேசியவாதியாகவும் இருந்தார். அதனால் ஸ்ரீ பிரகாசம் அவர்கள் சுயராஜ்யா' பத்திரிகை தொடங்கியபோது அதன் ஆசிரியராகவும், பின்னர் தில்லியில் ஹிந்துஸ்தான் டைம்ஸ் பத்திரிகை தொடங்கப்பட்ட போது அதன் ஆசிரியராகவும் நியமிக்கப்பட்டார். பிகானீர் திவானாகவும் வேலை செய்தார். பின்னர் பாரதம் சுதந்திரம் பெற்றவுடன் பல நாடுகளில் நமது தூதராகப் பணியாற்றினார். சீனாவில் அவர் தூதராக இருந்தபோதுதான் சீனா திபெத்தைக் கபளீகரம் செய்தது. திபெத் விவகாரத்தில் ஸ்ரீ பணிக்கர் ஒரு சொல்லுக்குச் செய்த வியாக்கியானம் காரணமாகவே, இந்தியா திபெத் விவகாரத்தில் அன்று தலையிடாமல் இருக்க நேர்ந்தது என்று கூறுவோரும் உண்டு. அவருடைய பிரிவினால் வருந்தும் அவர் குடும்பத்தாருக்கு நமது ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.



ஸ்ரீ பணிக்கர்

## வேலூரில் பி. ஸி. ஜி.

வேலூரில் டிசம்பர் முதல் தேதியன்றிரவு, ஒரு கல்லூரி மாணவன் உயிர் நீத்தான். அவனுக்குப் பி. ஸி. ஜி. ஊசி குத்தப்பட்டிருந்தது. ஆனால், நகர சபை சுகாதார அதிகாரி, பி. ஸி. ஜி. குத்தப்பட்டதன் விளைவாக அவன் இறக்கவில்லையென்றும், வேறு காரணங்களினால் இறந்திருக்கக் கூடும் என்றும் ஆஸ்பத்திரி வைத்தியர்கள் கருதுகிறார்கள் என்று சமாதானம் கூறியிருக்கிறார். பழைய வியாதியைக் கிளறிவிட்டுக் கொல்லும் சக்தி பி. ஸி. ஜி.க்கு உண்டு என்பது இப்போது தெரிய வருகிறது. வேலூர் நகர சபைத் தலைவர் பி. ஸி. ஜி. ஊசி குத்திக் கொள்ள விரும்பாதவர்களைக் கட்டாயப்படுத்த வேண்டாம் என்று சர்க்கார் அதிகாரிகளைக் கேட்டுக் கொள்கிறார்.

## நாதத்துக்கு நானூறு

கர்நாடக சங்கீத சம்பிரதாயத்தின் பிதாமகராகக் கருதப்படுபவர் ஸ்ரீ புரந்தர தாஸர். நமது சங்கீத மரபு 'கர்நாடக' என்ற அடைமொழியைப் பெற்றதற்கே கர்நாடக தேசத்தைச் சேர்ந்த ஸ்ரீ தாஸர் அவர்கள் ஒரு காரணம் என்றும் சொல்வதுண்டு. கன்னட மொழியில் அவர் அளித்துள்ள கீதங்களும், கீர்த்தனங்களும், பதங்களும் இன்று பிரசித்தமாக உள்ளன. ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவிடம் பரம பக்தி பூண்டிருந்த அந்த நாதோபாஸகரின் நானூறாவது நினைவு நாள் வருகிற பஹுள புஷ்ய அமாவாசை அன்று—அதாவது 1964 ஜனவரி 14ந்தேதி நிகழ்கிறது. இதையொட்டிப் பலவிடங்களில் விழாக்கள் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன. இவற்றுக்குச் சிகரமாக, அவர் வாழ்ந்த ஹம்பியில் சங்கீத மகோத்சவம் ஒன்று நடக்கவிருக்கிறது. பிரபல சங்கீத வித்வான்கள், உபந்நியாஸகர்கள், பஜனைக் கோஷ்டியினர் விழாவில் கலந்து கொள்ளவிருக்கிறார்கள். தாஸரைக் குறித்த கண்காட்சிக்கும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. தாஸரவர்களின் பாடல்களைப் புத்தகத் தொகுப்புக்களாக வெளியிடவும் ஏற்பாடாகி வருகிறது. ராவ்பகதூர் பி.வேங்கடேசாச்சார் அவர்களைத் தலைவராகவும், ஸ்ரீமான்கள் கே. சம்பத்கிரி ராவ், பிந்துமாதவ புர்லி, பி. அனந்தாச்சார், டி. ரங்கா ராவ் ஆகியோரைக் காரியதரிசிகளாகவும் கொண்டு செயல்படும் ஒரு குழு விழாவை அதி விமரிசையாக நடத்த முயன்று வருகிறது. தாஸரின் திவ்விய நினைவில் தங்கள் திரவியத்துக்குப் பங்கு தர விரும்பும் அன்பர்கள் கீழ்க்கண்ட முகவரிக்கு நன்கொடை அனுப்ப வேணும்: ஸ்ரீ என். திப்பையா, பொருளாளர், ஸ்ரீ புரந்தரதாஸர் நானூறாண்டு விழா சம்யுக்த சமிதி, படேல் நகர், ஹாஸ்பெட்.











1. புதிய மந்திரிகளுடன் பிரதமரும் ராஷ்டிரபதியும். 2. கல்கத்தா தமிழ்ச் சங்கத்தில் சுக பிரம்மம் ஸ்ரீ இராமஸ்வாமி சாஸ்திரிகள் உபந்நியாசம் செய்தார். 3. 'விமுக்தி' சம்ஸ்கிருத நாடகத்தில் சென்னை பிரதம நீதிபதி. 4. சென்னை பத்திரிகை நிருபர்கள் விழாவில் பாரதப் பிரதமர். 5. குழந்தை எழுத்தாளர் சங்கத்தினர் நவம்பர் 14ந் தேதி குழந்தைகள் தினத்தைச் சிறப்பாகக் கொண்டாடினர். 6. தமிழ்நாடு வர்த்தகக் கழகத்தின் ஆறுவது மகாநாடு திருச்சியில் நடந்தது. 7. மதுரையில் சென்ற மாதம் 26ந் தேதி ஜெகவீர பாண்டியனுருக்கு நிதியளிப்பு விழா சிறப்பாக நடைபெற்றது. 8. திருச்சி செயின்ட் ஜோசப் கல்லூரியின் நூற்றாண்டு நினைவு நூல் நிலையம் திறந்து வைக்கப்பட்டது.










## 37

**மா**யனாகிய திருமாலின் லீலையை வியப்போடு பாடுகிறார் பேயாழ்வார்.

**உணரில் உணர்வு அரியன்**

*[உணரில் - மனமானது உணர்ந்து பார்க்க முயன்றால். உணர்வு அரியன் - அப்படி உணர்வதற்கு முடியாத பரம்பொருள் அவன்.]*

**உள்ளம் புகுந்து**
**புணரிலும் காண்பரியன்**
**உண்மை—**

*[உள்ளம் புகுந்து - அவனாகவே நமது உள்ளத்திற்குள் வந்து. புணரிலும்-கூடி நின்ற போதிலும். உண்மை காண்பரியன் - அவன் வந்து நிற்கும் உண்மையைக் காண்பதற்கு முடியாது.]*

**—இணர் அணைய**
**கொங்கணைந்து வண்டு அறையும்**
**தண்துழாய்க் கோமானை**

*[இணர் அணைய - பூங்கொத்துக்களுக்குள் புகுந்து. கொங்கு அணைந்து - தேனைப் பருகி. வண்டு அறையும் - வண்டுகள் பாடுகிற. தண் துழாய்க் கோமானை - குளிர்ச்சியான திருத் துழாய் மாலை அணிந்த சர்வேசுவரனை.]*

**எங்கணைந்து காண்டும்**
**இனி**

*[எங்கு அணைந்து - எங்கே நெருங்கி. காண்டும் இனி - இனிப் பார்ப்பது.]*

உணர்வு மூலமாக அதாவது நமது ஞானத்தைச் செலுத்தி அதன் பயனாக உணர்ந்து பார்க்கலாம் என்றால் அவனுடைய ஸ்வரூபத்தை உணர்வதற்கு அரியவன் அவன். அவனாகவே என்னிடம் அருள் செலுத்தி உள்ளத்தில் கோயில் கொண்டிருக்கிறான். ஆயினும் என்னுள்ளே இருக்கும் அவனுடைய ஸ்வரூபத்தைக் காணமுடியாது. அவன் ஸ்வரூபத்தைக் காணாமலே ஆனந்தம் அடைவதுதான் என் காரியம் என்கிறார் ஆழ்வார். அவனுடைய மாலையில் உள்ள தேனை அருந்தி ஆனந்திக்கும் உணர்வற்ற வண்டுகளைப் போல் தானும் இருக்க வேண்டும், அவ்வளவே, என்பது தொனிக்க அந்த வண்டுகளைப் பாடுகிறார்.

**உணரில் உணர்வரியன்**
**உள்ளம் புகுந்து**
**புணரிலும் காண்பரியன்**
**உண்மை — இணர் அணைய**
**கொங்கணைந்து வண்டறையும்**
**தண்துழாய்க் கோமானை**
**எங்கணைந்து காண்டும்**
**இனி !**







# திருவிடைமருதூர் திருவிழா

ஒவ்வொரு க்ஷேத்திரத்திலுமுள்ள லிங்க மூர்த்திக்குக் கபாலீசுவரர், ஏகாம்பரேசுவரர் என்பது போல் நாமங்கள் அமைந்திருக்க, திரு இடை மருதூர் லிங்கமூர்த்திக்கு மட்டும் மஹா லிங்கம் என்றே தனிப் பெயர் வழங்கப்படுகிறது.

சோழ நாட்டையே ஒரு திருக்கோயிலாகக் கொண்டு திரு இடை மருதூர் மஹாலிங்க ஸ்வாமியை மூல ஸ்தானமாக வைத்துப்பார்த் தால், கோயில் சில்ப முறைப்படி இந்த மூலஸ் தானத்துக்குத் திருவலஞ்சுழி விநாயகர் சந்நிதி யாயும், சுவாமிமலை சுப்பிரமணிய சந்நிதியாயும், சிதம்பரம் நடராஜர் சந்நிதியாயும், திருவாரூர் சோமாஸ்கந்தர் சந்நிதியாயும், ஆலங்குடி தட்சிணாமூர்த்தி சந்நிதியாயும் விளங்குவது ஓர் அற்புதமாகும்.



தொன்மையும், தெய்வத் தன்மையும் வாய்ந்த இந்தப் பதியில் ஆதிசங்கர பகவத் பாதர்களும் பாதம் பதித்திருக்கிறார்கள். ஆதிசங்கரர் இந்த ஆலயத்துக்குச் சென்றபோது மஹாலிங்கத்திடமிருந்து ஓர் அபயஹஸ்தம் வெளிப்பட்டது. அசரீ வாக்கு ''ஸத்யம் அத்வைதம்'' என்று மும்முறை கூறியஅற்புதம் நிகழ்ந்தது.

இத்தெய்விக சம்பவத்தைப் பக்தர் களுக்கு என்றும் நினைவூட்டும் நற்பணி இப்போது நடைபெற்றிருக்கிறது. திரு விடைமருதூர் ஆலய வடக்குக் கோபுரச் சந்நிதியில் பூர்விகமாக அமைந்துள்ள ஸ்ரீமடத்தைக் கருங்கல் திருப்பணி செய் திருக்கிறார்கள். முகப்பு விமானத்தில் மஹா லிங்கமூர்த்தியை வழிபடும் முறையில் ஆதிசங்கர பகவத்பாதரையும், மஹாலிங்க மூர்த்தி அபயஹஸ்தம் வெளிப்படக் காட்சி யளிப்பதையும் சிலை வடிவில் தரிசிக்கிறோம். உள் மண்டபத்தின் சதுக்கத்தில் ஸ்ரீ குரு பாதுகையைப் பிரதிஷ்டை செய்யும் புனித வைபவத்தில் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதி பதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய சுவாமி களும் புதுப் பெரியவர்களும் கலந்து கொண்டு பொலிவு கூட்டினர். இம்மாதம் ஐந்தாம் தேதி திருவிடைமருதூரில் இந்தத் தெய்வத் திருவிழா நடைபெற்றது. இரு சுவாமிகளும் ஸ்ரீ குருபாதுகையை முழுக் காட்டி ஸ்வாமிக்கும் ஆசாரியருக்கும்







ஆராதனை நிகழ்த்தினர். ஆதி சங்கர பாதுகைக்கு ஸ்ரீ பெரியவர்கள் சால்வைகளாலேயே அர்ச்சனை புரிந்து, அந்தச் சால்வைகளை வேத வித்தகர்களுக்கு வழங்கினார். வேதம் நிறைந்த இத்தமிழ் நாட்டில் வேத நெறி தழைத்தோங்க ஒரு விழாவாக இவ்வைபவம் இனிது நிறைவேறிற்று.

# ஒரு மகாவித்வான்

## —முசிரி சுப்பிரமணிய அய்யர்—

இவ்வாண்டு மியூஸிக் அகாடமியின் சங்கீத கலாநிதியாகும் பூதலூர் கிருஷ்ண மூர்த்தி சாஸ்திரி அவர்களால் பிரசித்தி பெற்றுள்ள பூதலூர் கிராமம் தஞ்சாவூருக்குப் பக்கத்தில் இருக்கிறது. அங்கு வித்வான் சேதுராம சாஸ்திரிகளுக்கு 1894 ஏப்ரல் 29ம் தேதியன்று புதல்வனுகப் பிறந்தார் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள். சிறு வயதில் பூதலூர் விஜய கோதண்டராமஸ்வாமி கோயிலில் நடக்கும் உற்சவாதிகளில் பாடப் படும் தோடயமங்களம், அஷ்டபதி, தரங்கம் முதலியவைகளைக் கேட்டு வந்தார். தம் தகப்பனுரிடம் சங்கீதம் பயின்ருர்.

பதினாறுவது வயதில், மகா வித்வானுகிய கோனேரி ராஜபுரம் வைத்தியநாத ஐயர் அவர்களிடம் சிஷ்யனாகச் சேர்ந்தார் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள். வைத்தியநாத ஐயரோடு கச்சேரிகளில் உடன் பாடியும் வந்தார் சிஷ்யர். ஐயர் அவர்கள் சாஸ்திரி களைத் தம் வீட்டுப் பிள்ளை போலவே கவனித்து வந்தார். பெட்டிச் சாவி முதற் கொண்டு இவரிடம்தான் இருக்குமாம்.

அதன் பின்னர் பிரம்மஸ்ரீ முத்தையா பாகவதரிடம் சிஷ்யனுய் அமர்ந்து பின்பாட்டுப் பாடிவந்தார் நம் சாஸ்திரிகள். மெலட்டூர் சின்ன வைத்தியநாத ஐயரை ஸ்ரீ முத்தையா பாகவதர் வரவழைத்து அவரிடம் தியாகப் பிரம்மத்தின் அநேக உருப்படிகளைப் பாடம் பண்ணினுர். கூட இருந்த சாஸ்திரிகளும் அவற்றைப் பாடம் செய்துகொண்டார்.

முத்தையா பாகவதர் தமது வீட்டிலிருந்த கிளிக் குஞ்சுத் தம்புராவில் கோட்டு வாத் தியம் போல் வாசிப்பது வழக்கம். ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகளுக்கு அந்த வாத்தியத்தில் மிகுந்த ருசி ஏற்பட்டது. தம் ஊருக்குச் சென்று தம்புரா வில் சாதகம் செய்து வந்தார் நம் சாஸ்திரிகள். குருவினிடம் நேர்முகமாக இந்த வாத்தியத்தைக் கற்காவிட்டாலும், ஏகலை வன்போல் குருவை மனத் தில் தியானம் செய்து கொண்டு சாதகம் செய்து வந்த சாஸ்திரிகள் விரை வில் அந்த வாத்தியத்தில் முன்னேற்றம் அடைந் தார். முதலில் இவ்விஷ யத்தில் அவ்வளவு விருப் பம் காட்டாத இவருடைய தகப்பனுர் மகனுடைய வாசிப்பைக் கேட்டு மகிழ்ந்து தஞ்சாவூரில் ஒரு புதிய கோட்டு வாத்தியமே செய்யச் சொல்லி வாங் கிக் கொடுத்தார். இவர் நாள்தோறும் காலை ஏழு மணி முதல் பன்னிரண்டு மணி வரை — அதாவது ஐந்து மணிகள் — தவருமல் சாதகம் செய்துவந்தார். தஞ்சை வீணை வெங்கடாசலம் ஐயர் என்பவரிடம் வீணைபோல் இக் கோட்டு வாத்தியத்தில் பக்கஸாரணிகளை மீட்டும் விதத்தைக் கேட் டுத் தெரிந்து கொண்டார்.

கோட்டு வாத்தியம் மெட்டுக்கள் அமைக் கப்படாத வீணை போன்றது. வலக்கை விரல்களால் மீட்டி, இடக்கையில் ஒரு கட்டையை வைத்துக் கொண்டு வாசிக்கப் படுவது. அந்தக் கட்டைக்குக் கோடு என்று பெயர். அதனுல்தான் இது கோடு + வாத்தி யம்: கோட்டு வாத்தியம் என்று பெயர் பெற்றது. இதனை மகா நாடக வீணை என்றும் அழைப்பதுண்டு. இந்த வாத்தியத்தில் கமகம், ஜாரு முதலியவை நன்ருக வாசிக்க வரும்; ரவை ஜாதிகள், பிர்க்காக்கள் முதலியவைகளை வாசிப்பது மிகவும் கடினம். நம் சாஸ்திரி களுக்கு நல்ல சாரீர சம்பத்து. குரலில் மேற் காலம், ரவை ஜாதிகள், பிர்க்காக்கள் எல் லாம் தெளிவாகப் பேசும். குரலில் பேசுவன அப்படியே கோட்டு வாத்தியத்தில் சாதித்து வெற்றி கண்டவர் சாஸ்திரிகள். ராகஸ்வ ரூபம் நன்ருக விளங்கும்படி களை கெடாமல் கற்பனையாக ராக விஸ்தாரம் செய்வதில் இவர் வல்லவர்.

ஆதிகாலத்தில் வீணை சேஷண்ணு, பல் லடம் சஞ்சீவ ராவ், கரூர் சின்னசாமி ஐயர் முதலான வித்துவான்கள் கச்சேரி செய்யும் இடங்களில் நம் சாஸ்திரிகளும் இடம்பெற்றுக் கச்சேரிகள் செய்ததுண்டு. திருவிடை மருதூர் சகாராம ராவ் இவரது வாசிப்பைக் கேட்டு இவரைக் கட்டித் தழுவிக்கொண்டு "உன் வழி வீணை வழி" என்று பாராட்டி ஞராம். சாஸ்திரிகள் காரைக்குடி வீணை சகோ தரர்களைப்போல் வாசிக்க வேண்டும் என்று முயன்று வெற்றி கண்டார். கோட்டு வாத்தியத்தில் தலைசிறந்த வித்வானெனப் பண்டிதரும் பாமரரும் போற்றும் பெருமையைக் காலக்கிரமத்தில் பெற்ருர்.

இந்தப் பெருமைக்குச் சான்ருக 1958ல் ஜனுதி பதிப் பரிசு இவருக்கு வழங் கப்பட்டது. 1962லிருந்து கலாக்ஷேத்திரத்தின் முதல் வராகவும், கர்நாடக சங் கீதக் கல்லூரியில் பகுதி காலப் பேராசிரியராகவும் பணியாற்றி வருகிறர். இம் மகா வித்வானை அகாடமியினர் இந்த ஆண்டு மகாநாட்டுக்குத் தலைவராகத் தேர்ந்தெடுத் திருப்பது மிகவும் மகிழ்ச் சிக்குரிய விஷயம்.



ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள்






# இளமைப் பருவம்

ஒரு அழகுப் பெண்மணி யாகத் திகழ தயார் செய்துகொண்டிருக்கி றீர்களா? உங்கள் இடைக்கால வருடங்களில் தான் மேனி எழிலுக்கு அதிகப்படியான பராமரிப்பு மிகவும் தேவை.

லட்சக் கணக்கானவர்களால் உபயோகிக்கப்பட்டு நம்பிக்கைக்குப் பாத்திரமான, இந்தியாவிலேயே பிரமிக்கச்செய்யும் ஜி–11* சேர்ந்த ஒரே சோப்பான சிந்தால் உபயோகித்து உங்கள் மேனியெழிலைப் பராமரிப்பதைவிட வேறு சிறந்தவழி யேது? சாதாரணமாக சருமத்தில் களங்கத்தை உண்டுபண்ணும், துர்நாற்றத்தை எழுப்பும் கிருமிகளை ஒழித்துக் களங்கமற்ற பரிசுத்தமான மேனி யெழிலோங்க சிந்தால் உறுதி செய்கிறது.




வியர்வை நாற்றத்தைப் போக்கி, எழிலுடன் விளங்கச்செய்யும் சோப்

மிகுந்த வனப்பிற்கும், பூரணப் பாதுகாப்பிற்கும் இனிய மணங்கமழும், வியர்வை நாற்றத்தைப் போக்கி ஆறுதல் அளிக்கும் ஜி-11 அடங்கியுள்ள கோத்ரெஜ் சிந்தால் டால்லெட் பவுடர் உபயோகியுங்கள்.

கோத்ரெஜ் ஹேர்டானிக் கிலும் ஜி-11 அடங்கியுள்ளது.

* விவரமான "ஜி-11 என்பது என்ன?" என்ற இலவச புத்தகத்திற்கு 'கோத்ரெஜ், பம்பாய்-12', என்ற விலாசத்திற்கு எழுதுங்கள்.

**Godrej கோத்ரெஜ் சோப்புகளில் முதன்மையான பெயர்**

CT.2A.2/63 (20cm x (?)cm) TAM.

*எல். திவாடன் அண்டு கம்பெனியின் ட்ரேட் மார்க்

ஸ்ரீ ராமகிருஷ்ணர் தமது அன்பு வெள்ளத்தில் அடியார்களை எப்படி மூழ்கடித்தார் என்பதை அவருடைய பாதாரவிந்தங்களின் பக்கலில் அமர்ந்திருந்தவர்களே அறிய முடியும். மதுரத்திலும் அதிமதுரமாக, நளினத்திலும் பரம நளினமாக, அவர் சிஷ்யர்களுடன் பழகினார். தெய்வத் தன்மையைச் சூழல் முழுவதும் கமழ வைத்த அதே சமயத்தில் அவர் அடியார்கள் தம்மைத் தெய்வமாக மட்டும் கண்டு வணங்காமல் அன்புக்குரிய சகாவாகவும் எண்ணி சகஜமாகப் பழகச் செய்தார்.




ஆத்மிகம் அடர்ந்த சூழலில் வேடிக்கை விளையாட்டலைகளும் வீசுமாறு செய்தார் பரமஹம்ஸர். வேதாந்த சாதனைகளுடன் வனபோஜனமும் வம்புப் பேச்சுக்களுமாகக் காலம் கழிந்தது. வனபோஜனத்தின் போதே மனத்துக்கும் போஜனமளிக்கவும், பேச்சிலேயே மோனத்தை அறிவிக்கவும் எப்படியோ அறிந்திருந்தார் பரமஹம்ஸர்!

தட்சிணேசுவரத்தின் தருக்களின் நிழலில் குருநாதரும் சீடப் பிள்ளைகளும் அமர்ந்து மிக மிக சிநேக பாவத்துடன் தித்திக்கப் பேசிக் கொள்வார்கள். அநுபவக் கனிகள் பழுத்துக் குலுங்கும் ஆத்மிகத் தருவான குருவின் நிழலை உலக வேக்காட்டில் வெந்த சீடர்கள் அடைந்து சாந்தி பெற்றனர். அந்நாட்களைப் பற்றி விவேகாநந்தர் கூறுகிறார்:

"நாங்கள் அறியாமலே வேடிக்கை மூலமும் விளையாட்டு மூலமும் அவர் எங்களுக்கு எப்படிப் பயிற்சி அளித்தார், எங்கள் ஆன்மிக வாழ்வை உருவாக்கினார் என்பது உண்மையிலேயே புரியவில்லை. புதிதாக மல் யுத்தப் பயிற்சி பெறுபவனிடம் வஸ்தாத் எவ்வளவு ஜாக்கிரதையுடனும் கட்டுப்பாட்டுடனும் பழகுகிறானோ — ஒருபோது மிகவும் சிரமப்படுவது போல் காட்டி மாணுக்கனை வென்றும், இன்னொரு போது அவனுக்குச் சுய நம்பிக்கை வருவதற்காக அவனிடம் தோல்வியை ஒப்புக்கொண்டும் பயிலுவிப்பானோ — அதே போலத்தான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் எங்களுக்குக் கற்பித்தார்."

சிஷ்யர்களுடைய வாழ்க்கையின் நுண்ணிய அம்சங்களையும் கூர்ந்து கவனித்துப் பரிசீலித்து வந்தார் ஸ்ரீ ராமகிருஷ்ணர். எனினும் அவர்களின் சுதந்திரத்தைக் குலைக்காமலே, அவர்கள் இவர் தலையிடுவதாக எண்ணமுடியாத பக்குவமான முறையிலே இதையெல்லாம் செய்து வந்தார். அவர்களுக்குத் தாம் வழியை மட்டும் காட்டி அவர்களே சுதந்திரமாக மனமொப்பி அவ்வழியில் செல்லுமாறு செய்தார்.

சிஷ்யர்களின் சிரமங்களைப் பதமாகக் களைவதில் அவருக்கிருந்த திறமை அதிசயமானது. ஒரு முறை நரேந்திரர் தாம் வைகறை வேளையில் தியானம் செய்ய அமரும்போதெல்லாம் அருகிலுள்ள சணல் தொழிற்சாலையொன்றின் ஊது குழலோசை சிந்தனையைச் சிதற அடிப்பதாகப் பரமஹம்ஸரிடம் கூறினார். அப்போது பரமஹம்ஸர், அந்தக் குழலோசையை ஓர் இடையூறாகக் கருதாமல் அதிலேயே மனதைச் செலுத்தினால் விரைவில் மன ஒருமை

கிடைக்குமென்று கூறினர். அப்படியே செய்து மனசை எளிதில் ஒருமுகப்படுத்திக் கொண்டார் நரேந்திரர்.

இன்னொரு முறை தமது உடலுணர்வைப் பூரணமாக மறந்து தியானம் செய்ய இயலவில்லை என்று நரேந்திரர் ராமகிருஷ்ண தேவரிடம் முறையிட்டார். அப்போது, இதே சிரமத்தைத் தாம் அநுபவித்தபோது தமது குருவாகிய தோதாபுரி என்ன செய்தாரோ அதையே பரமஹம்ஸரும் நரேந்திரருக்குச் செய்தார். நரேந்திரரின் இரண்டு புருவங்களுக்கும் மத்தியில் தமது நகத்தினல் அழுத்திக் கீறினர் பரமஹம்ஸர். 'இப்போது உனக்கு உண்டாகியுள்ள வலியின் மீது மனசைச் செலுத்து' என்றார். என்ன ஆச்சரியம்! அவ்வாறு செய்தவுடன் நரேந்திரர் வெகு லகுவில் உள்ளம் குவிந்து, உடலை மறந்த தியானநுபவம் பெற்றார். உடலில் ஒரு பகுதியில் உண்டான வலியில் நினைவைச் செலுத்தியதால் மற்றப் பகுதிகளைப் பற்றிய நினைப்பு அழிந்து, கடைசியில் வலியின் நினைவும் தேய்ந்தது.

இளஞ் சிங்கமென தட்சிணேசுவரத்தில் சஞ்சரித்தார் நரேந்திர நாதர். அவரை விட வலு வாய்ந்த சிம்மமோ ஹம்ஸமாகி, பரமஹம்ஸமாகி அவரைக் கண்காணித்து வந்தது. இவ்வளவு நாள் ஐயத்திலும், துன்பத்திலும் சிக்குண்டு கிடந்த நரேந்திரரின் மனசும், அறிவும் இப்போது விடுதலை அடைந்து ஆனந்தத்தில் திளைத்துக் கொண்டிருந்தன.

ஒருமுறை நரேந்திர நாதரை மற்றச் சீடர்களுக்குச் சுட்டிக் காட்டிய குருமஹராஜ், ''பாருங்கள்! இதோ இந்த நரேனைப் பாருங்கள்! கரையறியாத ஓர் ஒளிக் கடல் போல இருக்கிறன் அவன். ஜகன்மாதாவான மகா மாயைகூட அவனுக்குப் பத்தடி தள்ளித்தான் நிற்கவேண்டும்'' என்றார்.

உடனேயே அன்னையைப் பிரார்த்திக்கலானர்: ''சர்வேசுவரி! உன்னுடைய மாயையில் சிறிதை நரேனுக்குள் கலந்துவிடு! அப்போதுதான் அவன் உன்னுடைய பணியைச் செய்ய முடியும்'' என்று. இல்லாவிடில் நரேந்திரர் உயர உயரச் சென்று ஆத்மாநுபூதி பெற்று முக்தி நிலையிலேயே நின்று விடுவார்; இந்த உலகம் அவரால் பெற வேண்டி யிருந்த லாபத்தைப் பெறுமலே போய்விடும் அல்லவா?

பரமஹம்ஸரின் சீடர்கள் யாவரும் நரேந்திரரைத் தங்கள் தலைவராகக் கொண்டனர். முன்னல் வந்தவர், பின்னல் வந்தவர் என்ற பேதமின்றி அவர்கள் நரேனை மதித்தது விசேஷமாகும். பரமஹம்ஸர் தங்கள் ஒவ்வொருவரின் அடி ஆழம் வரை நன்குகச் சென்று ஒவ்வொருவரையும்உள்ளபடி உணர்ந்திருந்ததை அவர்கள் அறிவார்கள். அப்படிப்பட்டவர் நரேந்திரரை மிகவும் உயர்வாகக் கருதினர் என்றல் உண்மையிலேயே நரேன் அதற்குத் தகுதி வாய்ந்தவராகத்தான் இருக்க வேண்டும் என மற்ற சீடர்கள் கருதினர்கள். போட்டி, பொறமை உணர்வுகளின்றி நரேந்திரருக்குத் தங்களில் முதலிடம் தந்தார்கள். குருமஹராஜின் சிஷ்யர்களிடையே எவ்வித மன வேற்றுமைகளும் இல்லாமலிருந்தது உலகத்தின் பாக்கியம். அதனல்தான் பிற்பாடு ராமகிருஷ்ண மடங்கள் என்னும் ஆத்மிகப் பண்ணைகளை விவேகாநந்தர் உலகெங்கும் அமைக்க முடிந்தது.

ராமகிருஷ்ணர் தமது உச்சந்தலையிலிருந்து உள்ளங் கால் வரையில் ஒவ்வோர் அணுவும் அநுபவம் செறிந்த மகாத்மா. அந்த அநுபவம் அளித்திருந்த உறுதிப்பாட்டுடன் அவர் ஒரு பார்வை பார்த்தாலோ, ஒரு சொல் சொன்னலோ கூட அவரது சீடர்கள் மணிக் கணக்காக நடத்திக் கொண்டிருந்த விவாதங்களுக்கு விடை கிடைத்து விடும்.

ஒரு நாள் நரேந்திரரும் மற்ற சிஷ்யர்களும் கடவுள் உருவமா, அருவமா என்பது பற்றியும் கடவுள் அவதாரங்கள் நிகழ்த்துவாரா என்பது பற்றியும் அமர்க்களமாக வாதப் பிரதிவாதங்கள் செய்துகொண்டிருந்தார்கள். ஸ்ரீ ராமகிருஷ்ணர் அவர்களை நோக்கிச் சென்றார். இனிய மென் குரலில் பாடலானர் :

**தர்சனம் ஆறிலும், தந்த்ரம் யாவிலும்**
**திருமறைதன்னிலும் தேடினல் வருமா?**
**அன்பின் மதுரசாரம் ஆத்மனின் ஆகாரம்**
**அன்பே அறபொருளின் அநுபவத்துக் காதாரம்**

விவாதம் புரிந்து கொண்டிருந்த சீடர்கள் விடை தெரிந்து கொண்டார்கள். 'சக ஜீவர்களிடத்தில் அன்பு; அந்த அன்பையே பக்தி என்ற பெயரில் ஆண்டவனிடம் செலுத்துவது' — இவற்றைச் செய்தால்தான் ஆண்டவனின் இயல்பு தெரியும்; அநுபவ வாயிலாகத் தெரியும். அதை விடுத்து புத்தி யுக்திகளால் ஆண்டவனின் இயல்பையும் அவனது அவதார ரகசியத்தையும் எப்படி அறிய முடியும்?

குழந்தையாக இருந்து குழந்தையின் மொழியிலேயே மகத்தான உபதேசங்

# B·I



## S. S. ரஜூலா

| சென்னையிலிருந்து | நாகப்பட்டினத்திலிருந்து |
|---|---|
| 1963 டிசம்பர் 26 | 1963 டிசம்பர் 27 |

கம்பெனியின் சென்னைக் காரியாலயத்தின் மூலம் விற்பனை செய்யக்கூடிய பர்த் வசதியற்ற மற்றும் பங்க் வசதியுள்ள மேற்கண்ட கப்பல் பிரயாணத்துக்குரிய டிக்கட்டுகள் எல்லாம் விற்பனை ஆகிவிட்டன. இருந்தாலும் இவ்வகுப்பு டிக்கட்டுகள் மேற்கண்ட கம்பெனியின் அங்கீகாரம் பெற்ற பாஸேஜ் புரோக்கர்களிடமிருந்து பெற்றுக் கொள்ளலாம்.

| C. M. குட்டி | AL. காசி செட்டியார் | கேரளா டிராவல்ஸ் |
|---|---|---|
| 38, அங்கப்ப நாயக்கன் தெரு | சுந்தரேசிக் சென்டர் பில்டிங்ஸ் | மாஸ்காட் ஹோட்டல் |
| சென்னை -1 | 5, அரமனைக்காரத் தெரு சென்னை -1 | திருவனந்தபுரம் |

பினாங்கு, போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலிய இடங்களுக்கு நேரடியாக ஏற்றிச் செல்லவும், சிங்கப்பூரில் கப்பல் மாற்றி ஆஸ்திரேலியா, நியூஜிலாந்து துறைமுகங்களுக்கு அனுப்பவும் சரக்குகள் ஏற்றுக் கொள்ளப்படும்.

பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றும் விவரங்களுக்குத் தயவுசெய்து எழுதவும்:

| பின்னி & கோ. (மதராஸ்) லிட். | மதுரா கம்பெனி பிரைவேட் லிட். |
|---|---|
| 7. அரமனைக்காரத் தெரு. சென்னை -1 | முதல் லேன் பீச் ரோடு. நாகப்பட்டினம் |

ஏஜெண்டுகள்: பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி லிமிடெட்

---

பண்டிட்
டி. கோபாலாச்சார்லுவின்

# ஜீவாம்ருதம்

ஆரோக்யத்திற்கும் பலத்திற்கும்

ஆயுர்வேதாஸ்ரமம்
பிரைவேட் லிட்.
மதராஸ்-17



''அதுக்குத்தான் பக்கத்திலே உக்கார்ந்து தூண்டில் போடாதேன்னு சொன்னேன்''

கலை அருளுவார் ஸ்ரீ ராமகிருஷ்ணர். 'அந்தரங்க சுத்தத்துடன் தரிசனம் கிடைக்க வேண்டும் என்று உள்ளுருகிப் பிரார்த்தித்தால் யாரும் தரிசனம் பெறலாம்; இதை மறந்து, புத்தி மூலம் பிரம்மத்தைப் பற்றி ஆராய்வதால் என்ன பயன் காண முடியும்? மழை எப்போது பெய்யும் என்று கூறும் பஞ்சாங்கத்தைப் பிழிந்தால் ஒரு சொட்டு நீரேனும் வருமா? அது போலத்தான் கடவுளை அடைய வழி கூறும் நூல்களைப் பற்றி விவாதிப்பதாலேயே அவரை அடைய எண்ணுவது' என்று அழகுற உபதேசிப்பார் பரமஹம்ஸதேவர்.

எனினும் அவர் சிஷ்யர்களைப் படிக்கவும், பேசவும் அநுமதிக்காமலில்லை.

தனது துறைக்கு உட்பட்டுச் செயலாற்றும் வரையில் பகுத்தறிவு சத்திய தரிசனத்துக்கு உதவுவது போல, படிப்பும் பேச்சும்கூட எல்லையறிந்து செயலாகும் போது உபயோகமாயிருக்கும் என்று அவர் கருதினார். தம் சீடர்கள் வாசிப்பதையும் வாதிப்பதையும் கண்டு மகிழ்ந்தார். வாதம் முற்றிவிட்டாலோ தவறான பாதையில் சென்றாலோதான் பரமஹம்ஸர் குறுக்கிடுவார். ஒரு நாள் நரேன் 'குருட்டு நம்பிக்கை'யைக் கண்டித்துப் பேசிக் கொண்டிருந்தார். அப்போது குருநாதர் ''குருட்டு நம்பிக்கை என்கிறாயே, அதற்கு என்ன அப்பனே, அர்த்தம்? நம்பிக்கை எப்போதுமே குருடுதான். நம்பிக்கைக்குக் கண் உண்டா என்ன?'' என்றார்.

ஆம். நம்பிக்கைக்குக் கண், காது, வாய் எல்லாம் ஏது? இதயம் ஒன்று தானே அதற்கு உண்டு?

இந்தப் போதனைகள் நரேந்திரரின் உள்ளத்தில் ஊற ஊற அநுபவ ஞானம் ஒன்றே ஞானம் என்று அவர் உணரலானார். ஆனால் அந்நிலையில் அறிவும், அறிபவனும் ஒன்றாகி விடுவதால், 'இதை அறிகிறோம்' என்ற ஞானமும் சாதகனுக்கு இராது. 'பாராமல் பார்ப்பது' என்று சொல்வது அதைத்தான்.

இந்த இரண்டற்ற அத்வைத நிலையை நரேன் அறிய வேண்டும்; அவர் அதற்காகவே பிறந்தவர் என்று கருதினார் ராமகிருஷ்ணர். எனினும் அவர் அந்த நிலையிலேயே வேரூன்றி விடலாகாது. அத்வைத உண்மையை உணர்ந்தபின் அதிலேயே லயித்து சுய விடுதலை பெற்று விடக் கூடாது; அதிலிருந்து விலகித் தாம் கண்ட உண்மையை உலகத்துக்கும் எடுத்துக் கூற வேண்டும் என்று கருதினார். மோட்சத்தையே விலக்கும் மகா தியாகத்துக்குப் பிரிய சிஷ்யரைத் தயாராக்கினார்.

இந்தத் தியாகத்தை ஒரு முறை சொல்லாமல் சொல்லி விளக்காமல் விளக்கினார் குருமஹராஜ்.

அன்று பரமஹம்ஸரும் சிஷ்யர்களும் வைஷ்ணவ சித்தாந்தத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். ஸ்ரீ கிருஷ்ண சைதன்ய மகாப் பிரபு அவலம்பித்த பக்தி மதத்தின் சாராம்சத்தைத் தெளிவுபடுத்திக் கொண்டிருந்த குருநாதர் சொல்வார் :

''இம்மதம் இதனைப் பின்பற்றுபவர்கள் மூன்று விஷயங்களை அநுசரிக்க வேண்டுமெனக் கூறுகிறது: பகவந் நாமத்தில் ஈடுபாடு, பரமனடியார்களான ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குச் சேவை புரிவது, உயிர்க்குலம் முழுவதற்கும் தயை காட்டுவது—இவையே அம்மூன்று. இந்தக் கொள்கையின் உட்பொருள் என்னவெனில் : பகவான் தனது நாமத்தினின்று பிறிதானவன் அல்ல. எனவே அவனது நாமத்தை ஸங்கீர்த்தனம் செய்ய வேண்டும். இதேபோல பகவானும் பக்தர்களும் வேறு வேறு அல்ல. எனவே வைஷ்ணவர்களுக்குச் செய்யும் பணி விஷ்ணுவுக்கே செய்ததாகும். மூன்றாவதாக இவ்வுலகமெல்லாம் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு உரியது. எனவே சகல ஜீவராசிகளுக்கும் தயை......''

பரமஹம்ஸரால் மேலே பேச முடியவில்லை. பேசும் நிலைக்கும் மேலே சென்று பாவ சமாதியில் நிலைத்து விட்டாரவர். பிறகு அவ்வுலகுக்கும் இவ்வுலகுக்குமிடையே உள்ள ஒரு நிலைக்கு வந்து, தமக்குத் தாமே கூறிக் கொண்டார் : ''சகல ஜீவராசிகளிடத்தும் தயை..... தயை! தயையாவது! அறிவிலியே, உலகத்தில்நெளிந்து ஊரும் அற்பப் புழுவல்லவா நீ! பிறரிடத்தில் தயை காட்டவாவது, தயை? முடியாது. அது மிகப்பெரிய வார்த்தை. நீ தயை காட்ட முடியாது, பணிதான் புரிய முடியும். பகவானின் தோற்றங்களே உயிர்கள்

## மானேர்ஸ் அதிர்ஷ்டக் குழந்தை விழாவின் முடிவுகள்

1963 செப்டம்பர் & அக்டோபர் மாதங்களில் பிறந்த குழந்தைகளுக்கு

அதிர்ஷ்ட தேதி: 1963 அக்டோபர் 3

அதிர்ஷ்ட நாள்: மாலை 5-25 மணி

முதல் பரிசு:
பேபி சரளகுமாரி, நவ்ஸாரி

இரண்டாம் பரிசு:
பேபி K. இந்திரா, சேளிக்குழி P. O.

மூன்றும் பரிசு:
பேபி விஜயலக்ஷ்மி, திருப்பூர்

ஜியாப்ரே மானேர்ஸ் & கோ., லிமிடெட்



## பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு

ப்ரைவேட் லிமிடெட்

"பாலுஸேரி பில்டிங்ஸ்"

3, சிங்கராசசாரி தெரு, திருவல்லிகேணி

தபால் பெட்டி நெ. 414, மதராஸ்-5

தந்தி: 'EVERMANS' போன்: 85834

சேரக் கடைசி தேதி 25-12-1963 ... முதல் ஏலத் தேதி 27-12-1963

**25 மாதங்கள் | மாதாந்திரச் சீட்டுகள் (4-வது வெள்ளிக்கிழமை ஏலங்கள்) | 25 அங்கத்தினர்கள்**

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | F | ரூ. 15/- | ரூ. 375/- |
| D | ரூ. 25/- | ரூ. 625/- | G | ரூ. 10/- | ரூ. 250/- |

**40 மாதங்கள் | நீண்டகால ஏலச் சீட்டுகள் | 40 அங்கத்தினர்கள்**

ஏலத் தேதி: 22-12-1963

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| A | ரூ. 500/- | ரூ. 20,000/- |
| B | ரூ. 250/- | ரூ. 10,000/- |

விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப்படும். சீட்டில அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச சேர்ந்தது. (போர்டார் உத்திரவுப்படி) எம். வி. சுப்ரமணியம், மானேஜிங் டைரக்டர்

இதர கிளைகள்: புது டெல்லி * பம்பாய் * பெங்களூர் * கல்கத்தா

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**



சென்ற நவம்பர் 2-ந் தேதியன்று அகில இந்திய ரேடியோவின் பத்தாவது சங்கீத சம்மேளனத்தைத் தொடக்கிவைத்த ராஷ்டிரபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்கள், ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் பாடிப் பதிவாகியுள்ள ஸ்ரீ வேங்கடேச ஸுப்ரபாதம் இசைத்தட்டை அச்சமயம் வெளியிட்டார். ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ் ஈ.ஸி.எல்.பி. 2293 எண்ணுள்ள நீண்டநேர இசைத்தட்டில் ஒரு புறம் ஸ்ரீ வேங்கடேச ஸுப்ரபாதத்தையும், மறுபுறம் 'பாவயாமி ரகுராமம்' 'ஸ்ரீரங்கபுர விஹார' பாடல்களையும் ஸ்ரீமதி எம். எஸ். அவர்கள் பாடியிருக்கிறார். இந்த இசைத்தட்டில் எம். எஸ்ஸுக்குக் கிடைக்கும் சன்மானம் முழுவதும் திருப்பதி தேவஸ்தானத்தினால் நடத்தப்பட்டு வரும் வேத பாடசாலையின் சம்ரக்ஷணைத்துக்கு அளிக்கப்படுகிறது என்பதை மிக்க மகிழ்ச்சியுடன் குறிப்பிட்ட ராஷ்டிரபதி, ''எம். எஸ்ஸின் மகோன்னதமான சாரீரம் நமது தலைமுறையின் தலைசிறந்த பொக்கிஷங்களில் ஒன்று'' என்று பாராட்டினார்.

---

எனக் கண்டு அவர்களுக்கு நீ பணிதான் புரிய வேண்டும்.''

ஸ்ரீராமகிருஷ்ணருடைய இதயத்தின் அந்தரங்கத்திலிருந்து அந்த வார்த்தைகள் கனிவு மயமாகத் ததும்பின. கேட்பவர்களுக்கு ரோமாஞ்சனமுண்டாயிற்று. நரேந்திரருக்கு அதன் முழுப் பொருளும் புரிந்தது. இந்த உபதேசத்துக்காகத்தான் அவர் பிறந்திருந்தார்! இந்த உபதேசத்தை வாழ்க்கையில் நடத்திக் காட்டத்தான் அவர் ஜனித்திருந்தார். பந்தைப் பிடிப்பதற்காகக் காத்துக் கொண்டிருக்கும் கைகள் போல இந்த உபதேசத்துக்காகத்தான் அவரது ஆத்மா காத்துக்கொண்டிருந்தது. இப்போது நழுவாமல் பிடித்துக் கொண்டு விட்டது. அவரது இதய மலரில் எந்த மகரந்தம் விழுந்து கனியைத் தோற்றுவிக்க வேண்டுமோ அந்த மகரந்தம் விழுந்தே விட்டது.

குருநாதர் கூறியதில் செறிந்திருந்த ஆழ்ந்த தாத்பரியத்தை சக மாணவர்களுக்குக் கூறலானார் நரேந்திரர்:

''குருமஹராஜின் அந்த அற்புதமான வார்த்தைகளில் எத்தகைய அசாதாரண ஒளியை நான் கண்டு கொண்டேன் தெரியுமா? பக்தியின் லட்சியத்தையும், வேதாந்தத்தின் ஞானத்தையும் எவ்வளவு பாங்குற அவர் இணைத்து விட்டார்! வேதாந்தம் மிகவும் கடினமானது, கடுமையானது, மானுட உணர்ச்சிகளை வெறுப்பது என்றல்லவோ பொதுவாகச் சொல்கிறார்கள்? வேதாந்த ஞானம் பெற வேண்டுமெனில் சமூகத்தைப் பகிஷ்கரித்துவிட வேண்டும்; அன்பு, பக்தி, தயை முதலிய கோமளமான உணர்ச்சிகளை வேரோடு கெல்லி எறிய வேண்டும் என்றெல்லாம் எண்ணப்படுகிறது. உலகமும் உலகத்தில் உள்ள உயிர்களும் ஆத்ம சாதனைக்குத் தடைகள் என்றெண்ணி அவற்றிடம் மாற்ற முடியாத வெறுப்புக் காட்டத் தொடங்குகிறான் சாதகன். அது தவறு என்று காட்டிவிட்டார் குருமஹராஜ். சமூகத்திலிருந்து வெளியேறிய ஏகாங்கி அப்பியசிக்கும் வேதாந்த லட்சியத்தை சமூகத்திலிருந்து கொண்டே அநுஷ்டிக்க முடியும்; நாட்டிலும் வீட்டிலும் நம் இகவாழ்வின் தினசரி நடவடிக்கைகள் சகலத்திலும் அநுஷ்டிக்க முடியும் என்று உணர்ந்து கொண்டேன். ஒருவனின் தொழில் எதுவாக வேண்டுமானாலும் இருக்கட்டும். அவன், கடவுளேதான் உலகாகவும் உலகிலுள்ள பொருள்களாகவும் தோன்றுகிறான் என்று புரிந்து கொண்டால் போதும். ஜீவராசிகளிலெல்லாம் ஈசுவரனைக் காண்பதால் எவ்விதமான உயர்வு எண்ணமும் ஏற்பட இடமில்லாமல் போகிறது. பொறாமை அழிகிறது. அதே போலப் பரிதாபமும் அழிகிறது. அதாவது, நம்மை உயர்வாக எண்ணிக் கொண்டு மற்றவர்கள் நம்மை விடத் தாழ்வாக இருப்பதாக எண்ணி 'ஐயோ

பாவம்' என்று 'தயை' காட்டுகிறோமே, அது போகிறது. மனிதன் பரமனின் தோற்றமே என்றறிந்து அவனுக்குச் சேவை செய்வதால் இதயம் சுத்தமாகிறது. அந்த க்ஷணமே சாதகன் சச்சிதானந்தப் பரம்பொருளில் தான் இணைந்திருப்பதை உணர்கிறான்.

''வேதாந்தத்தில் மட்டுமின்றி, பக்தி மார்க்கத்திலும் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் வாக்குகள் ஒரு புத்தொளி பரப்புகின்றன. கடவுள் எல்லாவற்றிலும் உள் நின்று விளங்குகிறான் என்று சாதகன் உணராதவரையில் அவன் உண்மையான பக்தியிலிருந்து மிகவும் தள்ளியே நிற்கிறான். எல்லா ஜீவர்கள் மூலமும், எல்லா ஜீவர்களிலுமே பரமனைக் கண்டு, மக்கள் சேவையின் மூலம் அவனை ஆராதிக்கும் போதுதான் ஒருவன் உண்மையான பக்தியைப் பெறுகிறான். கர்மயோக மார்க்கத்தில் செல்பவர்களும் குருநாதரின் இந்த உபதேசத்தால் பயன் பெறுகிறார்கள். ஓர் உடலைப் பெற்று விட்ட ஜீவனால் ஒரு கர்மமும் புரியாமல் நிமிஷ நேரம்கூட இருக்க முடியாது. எனவே அவனுடைய கர்மங்கள் யாவும் மன்பதைப் பணிக்குத் திருப்பி விடப்பட வேண்டும்.... **ஆண்டவனின் சங்கல்பம் மட்டும் இருக்குமாயின் இந்த மகோன்னதமான சத்தியத்தை இந்தப் பரந்த உலகுக்கு நான் பிரகடனம் செய்யும் நாள் விரைவிலேயே வரும்.** இந்த சத்தியத்தை நான் எல்லோருக்கும்—அறிவாளி - அறிவிலி, தனிகன்-தரித்திரன், பிராமணன்-பஞ்சமன் எல்லோருக்கும்—பொதுவான சொத்தாக ஆக்குவேன்.''

அந்த நாளும் வரத்தான் செய்தது. அதை அனவரதமும் நினைப்பூட்டிக் கொண்டிருப்பவையே இன்று உலகெங்கிலுமுள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண மடங்கள். சமூக சேவை மூலம் ஈசுவரனைத் தொழுவதில் ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தினருக்கு இணையாக யாரைச் சொல்ல முடியும்?

'நெல்லுக் குத்துபவள் என்னென்ன பேசிக் கொண்டிருந்தாலும், நெல்லுக் குத்தியபடியே குழந்தைக்குப் பாலூட்டிக் கொண்டிருந்தாலும் கையில் உலக்கை விழக்கூடாது என்பதில் கவனம் இழக்காமல் இருப்பதுபோல் எந்தக் காரியத்திலிருந்தாலும் பகவானை மறக்கலாகாது' என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசித்தார். இதையே சற்று மாற்றி, அவர் எத்தனை எத்தனையோ சம்பிரதாயங்களை நிரூபித்துக் காட்டினாலும் அத்வைத தத்துவத்தை மறவாமலே அவ்வாறு செய்தார் என்று கூறலாம். பரம்பொருளும் உயிர்க் குலமும் ஒன்று என்ற அத்வைத பாவத்துடன் அவர் ஹிந்து மதத்தின் எல்லா சம்பிரதாயங்களையும் அநுஷ்டித்து, அவையும் அத்வைதமாகிய இறுதி சத்தியத்துக்கு அநுகூலமானவையே என்று காட்டினார். பக்தி, கர்மம் எல்லாமே இப்போது புதுப் பொலிவைப் பெற்றன. பக்தி என்பது எங்கோ உள்ள கடவுளை அடைந்து அவருக்குத் தாஸனாக இருப்பது மட்டுமல்ல; அந்தத் தாஸத்துவம் மாறி, கடவுள் எங்கோ இருக்கிறார் என்பதும் மாறி, கடவுளே தானாகி, தன்னையே அநுபவித்துக் கொள்ளும் அத்வைத ஞானம்தான் பக்தி என்றாயிற்று. இதய சுத்தம் பெறுவதற்காகத் தனக்கு விதித்த சமூகக் கடன்களை ஒருவன் புரிவது மட்டுமே கர்மம் என்ற நிலை மாறிற்று. சமூகத்தையும் பிரம்மமாகக் காணும் பாவனையால் அவர்களுக்குப் புரியும் கர்மமும் பரம்பொருளை நுகரும் அத்வைதமாயிற்று. ஹிந்து மதத்துக்கு அத்வைத ஆதாரத்தினால் ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஊட்டியிருந்த இந்தப் பொருள்தான் நரேந்திரரின் பழைய கருத்துக்களை மாற்றி அவரை வெற்றி கொண்டது. மூட நம்பிக்கைகளும், ஜாதி முறையைத் தவறாகப் புரிந்துகொண்டு உயர்வு—தாழ்வு கற்பிப்பதுமே ஹிந்துமதம் என்று எண்ணியிருந்த நரேந்திரர், மூடத்தனமாக நம்புவதற்கு எவ்வளவோ மேம்பட்ட பிரத்தியக்ஷ அநுபவமும், உயர்வு-தாழ்வு எண்ணமேயின்றி சமபாவத்துடன் மக்கட் பணி புரிவதுமே உண்மையான வேதாந்த ஹிந்து மதம் என்று கண்டார். களிம்பு போன்ற மூட நம்பிக்கைகளையும், உயர்வு-தாழ்வு உணர்ச்சிகளையும் நீக்கினால் சொக்கத் தங்கமாகிய வேதாந்த தர்மம் கிடைக்கும் என்று தெளிந்தார்.

ஹிந்து மதத்தை எள்ளி நகையாடிய நரேந்திரரே இப்போது அம் மதத்தை உலகுக்கெல்லாம் பரப்பவேண்டும் என்ற ஆர்வத்தைப் பெற்றார். உடைகளைக் களைந்து நன்றாகத் துவைத்துச் சுத்தம் செய்து மீண்டும் உடுத்திக் கொள்வதுபோல் குழந்தைப் பிராயத்தில் தாம் அறிந்திருந்த ஹிந்து மதத்தை நடுவில் சிறிது காலம் கழற்றியிருந்த நரேந்திரர் இப்போது அதனை ஸ்ரீ ராமகிருஷ்ணரின் மகிமையால் சுத்தப்படுத்தி மீண்டும் அணிந்து கொண்டார். 'ஹிந்து மதம் புத்தகத்திலும் பேச்சிலும் இல்லை; இதோ கண் முன்னே உயிர் வாழ்கிறது' என்பதைக் கண்டபின், அவருடைய குழப்பங்கள் தீர்ந்தன. பிறப்பால் ஹிந்துவாக இருந்தவர் இப்போது உணர்வாலும், அறிவாலும் ஹிந்துவானார்.

(தொடரும்)

# இதோ ஒரு புலமை வீரர்

அவர் ஓர் ஆச்சரியகரமான மனிதர்! அவருடைய வீட்டுக்கு எதிர்ப்புறமுள்ள மாவட்டப் பொது நூல் நிலையத்தின் அலமாரிகளில் அவர் எழுதி அச்சிட்டு வெளியான நூல்கள் யாவும் கொலுவீற்றிருக்கும். ஆனால் ஆயிரக்கணக்கான பக்கங்களைக் கொண்ட இந்தப் பெரு நூல்களை எழுதிய அந்தப் புலமை வீரர் அதே வீதியில் அந்த நூல் நிலையத்துக்கு எதிரே உள்ள மாடியிலேயே இராப் பகலாக அமர்ந்து எழுதிக் கொண்டிருக்கிறார் என்பது யாருக்கும் தெரியாது. அவருடைய நூல்களில் ஒன்றின் பெயர் வீரபாண்டியம். கூர்ந்து பார்த்தால் அவருடைய வாழ்க்கையே ஒரு வீர பாண்டியமாகத்தான் தோன்றுகிறது.

''இந்தப் பெரிய நகரத்தில் எல்லாருக்கும் என்னைக் கவனித்து நினைவு வைத்துக்கொள்ள முடியா விட்டாலும் இரண்டு பேர் என்னை இடைவிடாமல் கவனித்துக் காப்பதற்கென்றே இருக்கிறார்கள். மீனாட்சியையும் சொக்கநாதரையும்தான் சொல்லுகிறேன்'' என்று நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டு புன்முறுவல் பூத்தபடி சொல்கிறார் அவர். அவருடைய பெரிய ஆயுதம் தன்னம்பிக்கை. அந்த நம்பிக்கையின் மறுபுறத்தை உழைப்பும் தன்மானமும் தாங்கிக் கொண்டிருக்கின்றன. தம்முடைய சிறந்த நூல்களை விரும்பி விலைக்கு வாங்குகிறவர்கள்—அப்படி வாங்குவதன் மூலம் தமது புலமையை மதிப்பதாகவும் — அந்த நியாயமான மதிப்பிலிருந்து கிடைக்கிற ஊதியத்தைக் கொண்டு வறுமையையும் செம்மையாக்கிக் கொண்டு வாழ வேண்டுமென்றும் அவர் ஆசைப்படுகிறார்.

இந்தப் புலவர் பெருமகனாரைக் காண வேண்டுமானால் தமிழ் நகரமான மதுரை மாநகரத்தில் மேலமாசி வீதியும்—திண்டுக்கல் சாலையும் சந்திக்கும் முனையில் — மேற்குப் பக்கம் பார்த்த ஒரு பழைய காலத்து வீட்டுக்குப் போக வேண்டும். ஒரு பக்கத்தில் பால் கடையும், மற்றொரு பக்கத்தில் வெற்றிலை பாக்குக் கடையுமாக இருபுறமும் நெருக்கிக் கொண்டிருக்கும் கடைகளின் நடுவே ஆரம்பமாகும் குறுகலான வாசற்படிக்கு மேலே நிலையில் திருவள்ளுவர் நிலையம் — வாகனி அச்சகம் என்று போர்டு தொங்குகிறது பார்த்தீர்களா? இந்த வழியாக உள்ளே படியேறிப் போனால் தமிழகத்தின் பழைய தலைமுறைப் பெரும் புலவர்களுக்குச் சமமாக இந்தக் காலத்தில் வாழும் ஒரு பெரும் புலவரைச் சந்தித்து அளவளாவுகிற அதிர்ஷ்டசாலிகளாக நாமும் ஆகலாம்!

மதுரைக் கவிராஜ பண்டிதர் ஜெகவீர பாண்டியனார் — வீரபாண்டியக் கட்டபொம்மனுடைய பரம்பரையில் வந்தவர். பழமையான புலமை மரபும் — பழமையான வீர மரபும் — சேர்ந்து தோன்றும் இந்தப் புலமை வீரரைப் பற்றித் தமிழ் மக்கள் தெரிந்து கொள்ள வேண்டிய சுவையான செய்திகள் எத்தனையோ உண்டு. எந்தப் பதிப்பகத்தின் உதவியையும் யாருடைய பொருள் சகாயத்தையும் எதிர்பாராமல் அரும்பெரும் நூல்களை எழுதித் தம் இல்லத்திலேயே அச்சுக் கோத்து மெல்ல மெல்ல நூலாக்கி வெளியிடும் இவருடைய நிதானத்தையும், தைரியத்தையும் எவராலும் பாராட்டாமல் இருக்க முடியாது. புத்தகம் எழுதுவதையும், அச்சிடுவதையும், வெளியிடுவதையும், விற்பதையும் மிகப் பரபரப்பானதொரு இயந்திர இயக்கமாக்கி விடாமல், காந்திய நெறியில் நின்று குடிசைத் தொழில் போல் நடத்தி வருகிறார் ஜெகவீர பாண்டியனார்.

கவிராஜ பண்டித கவிச் சக்கரவர்த்தி ஜெகவீர பாண்டியனார் அவர்களுக்கு நம் நன்றியைத் தெரிவித்துக் கொள்ள வேண்டுமென்பதற்காக — ஒரு விழா நடத்திக் கணிசமான தொகையொன்றை நிதியாகவும் வழங்க வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டு அன்பர்கள் சிலர் அவரைச் சந்தித்து அவருடைய சம்மதம் பெறச் சென்றிருந்தோம்.



அன்பர்களுடன



வேண்டிய புத்தகத்தைத் தேடுகிறார்.

''உங்களுடைய நூல்களை அச்சிட உதவியா யிருக்கும் என்று உங்களுக்கு ஒரு விழா நடத்தி நிதி வழங்கிக் கௌரவிக்க எண்ணியிருக் கிறோம்.'' — இதைக் கேட்டு விட்டுப் பதில் சொல்லாமல் சிறிது நேரம் மெல்லச் சிரித்துக் கொண்டிருந்தார் அவர். அப்புறம் அவர் என்ன மறுமொழி கூறப் போகிறாரோ என்று பயத்துடனும், ஆவலோடும் நாங்கள் காத் திருந்தோம்.

''நீங்கள் எல்லாம் நமக்கு மிகவும் வேண்டியவர்கள். அதனால் என்னை அதிகமாக அவமானப்படுத்திவிட மாட்டீர்கள் என்று நான் ஓரளவு நம்பலாம்'' என்றாரே பார்க்க லாம்! விருப்பையும், வெறுப்பையும் சுத்த மாக வெளியிட்ட அந்த ஆழமான பதிலைக் கேட்டு நாங்களெல்லாரும் அப்படியே



குடும்பத்துடன் கவிராஜ பண்டிதர்

அயர்ந்து போனோம். அவரோ மேலும் கூறலானார்:

''இந்தத் திருவள்ளுவர் நிலைய வெளியீடு களின் அருமை பெருமைகளைத் தமிழ் மக்கள் அறிந்து விலை கொடுத்து வாங்கி ஆதரித் தால் போதும். நிலைய வெளியீடுகளில் 'இரு நூறு செட்' விற்க ஏற்பாடு செய்தால் ஒரு விழா நடத்துவதைவிட அதிகமாக நான் பெருமைப்பட முடியும்.''

திருவள்ளுவர் நிலையத்தின் மாடியில் கவிராஜ பண்டிதருடைய எழுத்தறையும் — பூஜையறையும் — (இரண்டும் ஒரே அறை தான்) இருக்கின்றன. கீழே குடும்பமும் அச்சக இயந்திரங்களும் இருக்கின்றன. ஏறத்தாழ எண்பது வயதை நெருங்கிக் கொண்டிருக்கிற இந்த முதியவர்— (வயதில் மட்டும்தான்) கையில் உலாவச் செல்லும் போது வழக்கமாக எடுத்துப் போகிற பிரம் புடன் எதிரே நடந்து வந்தால் — கட்ட பொம்மனுடைய பரம்பரை என்பதை அந்த நிமிர்ந்த நடையே முன்மொழியும். சில சமயங்களில் கடுமையாயிருக்கும் அவருடைய பேச்சுப் பல சமயங்களில் குழந்தைத்தனமா யிருக்கும். இப்போதெல்லாம் அவர் அதிக மாக வெளியே வருவதே யில்லை. அவருடைய மாடியில் பூஜையறையிலேயே புத்தக அல மாரிகள் உண்டு. மாடியில் அவர் எழுதுவனை வற்றை — எடுத்து வந்து கீழே அச்சுக்கோப்ப தற்கு அவருடைய அருமைப் புதல்வர் குமார சாமி எந்த நேரமும் தயாராயிருக்கிறார். குமாரசாமியின் (கட்ட பொம்மன் பரம் பரையை நினைவூட்டுகிற) நீண்ட வெட்டரி வாள் மீசைதான் நம்மை ஒரு கணம் பய முறுத்துமே, தவிர, ''ஐயாவைத்தானே பார்க்க வந்தீங்க. மாடியிலே இருக்காக'' என்று சொல்லி வெண் பல் வரிசை தெரிய அவர் சிரித்துக் கொண்டே உடன் வந்து மாடிக்கு வழி காட்டும் போது நம்முடைய பயம் நிச்சயமாய்ப் பறந்து போகும். கவிராஜ பண்டிதரின் திருவள்ளுவர் நிலையத்தைச் சேர்ந்த வாசுகி அச்சகத்தில் - அச்சுக் கோக்கும் சாதனங்கள், ஒரு டிரெடில், புதிதாக ஒரு கட் டிங் மிஷின், ரூலிங், பைண் டிங் சாதனங்கள்—அவற்றின் நடுவே கவிராஜ பண்டிதரின் புதல்வர் குமாரசாமி எல்லா ரும் இருக்கிறார்கள்—சோம்ப லும், அசைதிரியாமும், அவ நம்பிக்கையும் திருவள்ளுவர்



கவிராஜ பண்டிதரின் புதல்வர் குமாரசாமி

நிலையத்திலோ, வாசுகி அச்சகத்திலோ, எந்த மூலையிலும் இல்லை என்பது உறுதி.

திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த ஒட்டநத்தத்தில் வரலாற்றுப் புகழ் வாய்ந்த வீர மரபில் பிறந்தவராகிய நம் கவிராஜ பண்டிதர் அவர்கள் 1937-ம் ஆண்டுவாக்கில் மதுரைமாநகரில் குடியேறினார்கள். கவிராஜ பண்டிதருக்கு மூன்று ஆண் மக்களும், மூன்று பெண் மக்களும் ஆக அறுவர் மக்கள் உள்ள னர். 1936ம் ஆண்டில் தம் அருமை மனைவியை இழந்தபின் தமிழ்த் தொண்டே கண்ணும் கருத்துமாக வாழ்ந்து வரும் இந்தப் புலமை வீரர் கால் நூற்றாண்டுக் காலமாக மதுரை மேலமாசி வீதியிலுள்ள திருவள்ளுவர் நிலையத் தில் ஊன்றிய கொள்கையும் சான்றாண்மையு

மாக வாழ்ந்து வருகிறார். இவருடைய ஒவ்வொரு நாளும் திட்டமிடப்பட்ட நாள். வீண் நாள் ஒன்றுகூட இல்லை. தமிழில் ஆழ்ந்த புலமையோடு, ஆங்கிலம், வடமொழி, தெலுங்கு, ஆகியவற்றிலும் கவிராஜ பண்டிதருக்கு நல்ல பரிச்சயம் உண்டு. இவருடைய 'பாஞ்சாலங் குறிச்சிவீர சரித்திரம்' என்ற நூலுக்குப் பரிசளித்துப் பாராட்டியதன் மூலம் தமிழ் வளர்ச்சிக் கழகம் பெருமைப் பட்டிருக்கிறது. திருவள்ளுவர் நிலைய நூல்களைப் பற்றிய அறிவிப்பில் 'அரிய பெரிய நூல்கள்' என்ற புகழ் வாசகம் இருக்கும். அண்மையில் நிகழ்ந்த பெரிய விழா ஒன்றில் கவிராஜ பண்டிதரே தைரியமாகவும், சாமர்த்தியமாகவும் அதற்கு விளக்கம் கூறினார்.

''என்னுடைய நூல்கள் அருமையும் பெருமையும் வாய்ந்தவை என்பதை உணர்ந்து கொண்டிருந்தும் — சொல்லத் தைரியமில்லாத — கோழைகளாகத் தமிழ்ப் பெருமக்கள் இருப்பதனால் நானே 'இவை அரிய பெரிய நூல்கள்' என்று வற்புறுத்த வேண்டிய அவசியம் அல்லது அவலம் ஏற்பட்டு விட்டது.''

கவிராஜ பண்டிதர் தமக்கு எப்படியாவது பொருள் வருவதை விரும்பவில்லை. தம்முடைய நூல்கள் விலைக்கு விற்று அந்த விற்பனை மூலம் பொருள் வருவதையே விரும்புகிறார். ஃபாஷனுக்காகப் பணம் கொடுத்து நூல்களை வாங்கி அடுக்கி விடுவதையும் அவர் விரும்புவதில்லை. நூல்களைச் வாங்கிச் செல்கிறவர்கள் அவற்றைப் படிக்கிறார்களா இல்லையா என்பதை அறிந்து கொள்ளுவதிலும் அவர் ஆர்வம் காண்பிக்கிறார். போலி ஆடம்பரங்களையும், உண்மையை விட்டு விலகிப் போகும் பொய்ம்மை நாகரிகங்களையும் அவர் வெளிப்படையாகவும், கடுமையாகவும் வெறுக்கிறார். ''என்னுடைய நூல்களை வாங்கிப் படிப்பதன் மூலம் என்னை வாழச் செய்யுங்கள்! என்னையும் வாழச் செய்ய வேண்டுமே யென்று எனக்கு ஏதாவது செய்ய முன்வராதீர்கள்'' என்பது இவருடைய உறுதியான கொள்கையாக இருக்கிறது.

திருக்குறளைக் கதைகள் மூலம் வெண்பாவாக வளர்த்து விளக்கும் 6200 பக்கங்களைக் கொண்ட திருக்குறட் குமரேச வெண்பாவையும் புலவர் உலகம், தருமதீபிகை என்ற தொகுதிகளையும் இவர் ஆக்கியளித்துள்ளார். பாஞ்சாலங்குறிச்சி வீர சரித்திரம் இரண்டு பாகத்தையும் கவிதை நடையில் வீரபாண்டியம் என்ற காவியத்தையும், இந்தியத் தாய் நிலை என்ற கவிதைத் தொகுதியையும் எழுதித் தமிழ்ப் பெருமக்களைக் கௌரவித்திருக்கிறார். கவிகளின் காட்சி, அகத்திய முனிவர், கல்வி நிலை, தமிழர் வீரம், உலக உள்ளங்கள், மாசிலாமணி மாலை, ஆகிய பிற நூல்களும் இவருடைய கைவண்ணத்தால் பொலிகின்றன. 'உலக உள்ளங்கள்' என்ற நூலில் 6000ம் ஆங்கிலப்பொன் மொழிகளை (பல்வேறுநாட்டு அறிஞரின் கருத்துக்கள்) அப்படியே தமிழில் குறட்பாக்களாக வடித்துத் தந்திருக்கிறார். அதனுடைய முதல் பகுதி மட்டும் இப்போது வெளிவந்துள்ளது. பெரிய நூல்கள் பல இவரிடம் இன்னும் அச்சிடத் தயாராயிருக்கின்றன. எல்லா நூல்களையும் சேர்த்தால் இந்தத் தனி மனிதருடைய அறிவுப் பயணத்தால் — ஞானயாத்திரையால் தமிழ்த் தாய்க்கு 40,000 பக்கங்கள் அடங்கிய மாபெரும் எழுத்துப் பணி கிடைத்திருக்கிறதென்று நிமிர்ந்து நின்று சொல்ல முடியும்.

மதுரைக் கவிராஜ பண்டிதருடைய ஒரு முழு நாள் அவருடைய பூஜையறையில்ஆரம்பமாகிறது. — பின்பு அதே அறையிலுள்ள மேஜையடியில் காகிதங்கள் எழுதப்பட்டுக் குவிகின்றன. மழையில்லாத மாலை வேளைகளில் தம்முடைய நிலையத்தின் மொட்டை மாடியிலிருந்து இந்த உலகத்தை இரசித்துப் பார்க்கிறார் அவர். அதைத் தவிர மற்ற நேரமெல்லாம் அவருக்கு எழுத்தும் படிப்பும் தான். அவருடைய மூத்த புதல்வர் சேலத்துக்கு அருகே ஒரு மடத்தில் துறவியாயிருந்து சித்த மருத்துவப் பணி புரிகிறார் — மற்றொருவர் வட்டார வளர்ச்சித் துறையில் வெளியூரில் உத்தியோகம் பார்க்கிறார். இன்னொருவரான குமாரசாமி தந்தையோடு இருந்து அச்சக வேலைகளைக் கவனித்துக் கொண்டிருக்கிறார். சமீபத்தில் மதுரைத் தமிழ் எழுத்தாளர் சங்கம் — அவருக்கு ஒரு நிதியளிப்பு விழா நடத்தி மகிழ்ந்தது.

கவிராஜர் பாண்டியனார் சிறந்த மேடைப் பேச்சாளர். நகைச்சுவையும் சிலேடையுமாக நன்றாய் இரசித்துப் பேசுவார். நடு நடுவே 'அர்த்தமாகுதா?' என்று கூட்டத்தில் இருப்பவர்களைக் கேட்டுக் கொண்டே அவர் குழந்தைக்கும் புரிகிற எளிமையோடு பெரியவர்களுக்கும் புரிவதற்கு அருமையான கருத்தை விளக்குகிற அழகே அழகு. ஒரு நல்ல பாட்டையோ, நல்ல கருத்தையோ இன்னொருவர் கூறக் கேட்டாலோ அல்லது அவரே கூறினாலோ, அவர் அதை இரசிக்கிற விதமே தனி. உடனே குரலும் முகமும் குழந்தைமை நிறைய ''ஐயோ...... அப்படியா...... அப்படியா?'' என்று ஜெகவீரர் வியப்பது நயமான காட்சிகளில் ஒன்று. அவருடைய 'ஐயோ'வை நாலு முறை கேட்டால் நல்ல கருத்துக்களில் அந்த எண்பது வயது வீரர் உருகி நெகிழ்ந்து குழந்தையாகி விடுவதைக் காண முடியும்.

இந்த எண்பது வயது இளைஞர் இந்த விநாடி வரை உழைப்பையும், தன்னம்பிக்கையையும் பக்க பலங்களாகக் கொண்டு தம்முடைய மிகப் பெரிய தமிழ்ப் புலமையைக் காப்பாற்றி வாழச் செய்து கொண்டிருக்கிறார். இவர் எண்ணற்ற பல தமிழ்ப் புலவர்களில் சாதாரணமான ஒருவரில்லை. புலமை வீரர். புகழப் பயப்படுகிறவர்களையும், புகழத் தயங்குகிறவர்களையும் இடித்துரைக்கிற தீரர். இவருடைய ஆசை தம்முடைய நூல்களை வாங்கியவர்கள் அவற்றைப் படிக்க வேண்டும் என்பது. இவருடைய எளிய வாழ்க்கை இவரே விளம்பரப்படுத்திக் கொள்ளாத காந்திய வாழ்க்கையாயிருக்கிறது. இவரைப் பற்றி நினைக்கும் போது மதுரையின் பெரிய கோபுரங்களும் நினைவு வருகின்றன.

ஆம்! மதுரையில் மிக உயர்ந்த கோபுரங்களும், கவிராஜ பண்டிதர் ஜெகவீர பாண்டியனாரும் இருக்கிறார்கள்.

நா. பா.

# உங்கள் பிரயாணம் குதூகலமாக இருக்க...

## கேவாபாக்ஸ் GEVABOX இந்தியாவில் தயாரிக்கப்பட்டது



உங்கள் காமிராவைக் கொண்டு பழஞ்சிறப்புக்களையும் சின்னங்களையும் மகிழ்வுடன் படமெடுக்க சுற்றுப் பயணம் சிறந்த வாய்ப்பளிக்கிறது.

அடுத்த விடுமுறைப் பிரயாணத்தில் கேவாபாக்ஸ் காமிராவினால் என்றும் நினைவிலிருக்கக்கூடிய படங்கள் எடுக்க நிச்சயித்துக் கொள்ளுங்கள். கேவாபாக்ஸ் காமிரா மற்ற காமிராக்களிலிருந்து மாறுபட்டது.

**இதில் உள்ள விசேஷ அம்சங்கள்**

* ப்ளாஷ் பொருத்தக்கூடியது
* எளிதில் பிலிம் இணைக்க முடியும்
* ஷட்டர் ஸ்பீட்கள்: 1/50 1/100 செகண்டு. "B" செட்டிங்
* கண்ணருகில் வைத்துப் பார்ப்பதற்கேற்ற வசதி யமைந்ததால் அகன்ற அல்லது செங்குத்தான படங்கள் எடுக்க உகந்தது
* நேர்த்தியான அமைப்பும் உறுதியான முழு உலோகத்தினால் தயாரிக்கப்பட்ட காமிரா
* 120 ரோல் பிலிமுக்கு ஏற்றது

எங்கள் டீலர்களிடம் கேவாபாக்ஸ் காமிராவை ஒரு முறை பாருங்கள்



விலை ரூ. 38.00

**GEVABOX** கேவாபாக்ஸ்—எங்கும் எவருக்கும் ஏற்றது

**ALLIED PHOTOGRAPHICS LIMITED**

அலைட் போட்டோகிராபிக்ஸ் லிமிடெட்

கஸ்தூரி பில்டிங், ஜாம்ஷெட்ஜி டாடா ரோடு, பம்பாய்-1

PSAPL 9/63

# கல்கி நினைவுச் சொற்பொழிவு



சென்னை பல்கலைக் கழகம் பல மொழிகளையும், பல கலைகளையும் வளர்க்கும் பெரிய கலைப் பண்ணை. பல்கலைக் கழகத்தில் பொதுவாக எல்லா ஆராய்ச்சி உரைகளும் ஆங்கிலத்தில் நடைபெறுவதையே வழக்கமாக மேற்கொண்டு வந்திருக்கின்றனர். இந்த மரபை மேற்கொள்ளாது தமிழ்க் கவிதை பற்றிய தமது நிறைவைத் தமிழிலேயே பேசிப் பெருமுழக்கம் செய்தார் பேராசிரியர் அ. சீனிவாச ராகவன் அவர்கள். இவர் ஆங்கிலத்திலும் அருந்தமிழிலும் ஆழ்ந்த புலமையுடையவர் என்பதைத் தமிழுலகம் நன்கறியும். தமிழ்க் கவிதையைத் தமிழிலேயே பேசும்போதுதான் உண்மை உணர்ச்சியுடன் கேட்போரைப் பரவசமாக்கும் வகையில் பேச முடியும் என்பதை நன்கு உணர்ந்தே இவர் தமிழ் முழக்கம் செய்தார் என்று தோன்றுகிறது. இந்த வகையில் முன்னோடியாய்ச் சென்னை பல்கலைக் கழகத்தில் செந்தமிழ் முழக்கத்தைத் தொடங்கிவைத்த பெருமை பேராசிரியர் சீனிவாச ராகவன் அவர்களையே சாரும்.

பல்கலைக் கழகத்தின் நூற்றாண்டுக் கட்டிடத்தில், காலம்சென்ற பேராசிரியர் *ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் நினைவுச் சொற்பொழிவை டிசம்பர் 3, 4, 5 தேதிகளில் மாலை 5–15 மணிக்குத் தொடங்கி ஒரு மணி நேரம் நிகழ்த்தினார் திரு அ. சீ. ரா. பேராசிரியர் அவர்கள் எடுத்துக்கொண்ட பொருள் ''ஒரு நூற்றாண்டுக் கவிதை'' என்பது. சென்ற நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த கோபால கிருஷ்ண பாரதியார் தொடக்கமாக இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த சுப்ரமண்ய பாரதியார் வரையில் மக்கள் மனத்தைப் பிணித்த சமூகப் பரிவுடன் பாடிய பாவலர் அறுவரைப் பற்றிப் பேசினார். முதல் நாளில் பல்கலைக் கழகத் துணை வேந்தர் டாக்டர் ஆ. இலட்கமணசாமி முதலியார் தலைமை வகித்து, தொடக்க உரையில் கல்கி அவர்களின் வரலாற்றையும், தமிழ்ப் பணியையும் விளக்கி ஆங்கிலத்தில் பேசினார். ஏனைய இரு நாட்களிலும் பல்கலைக் கழகப் பேராசிரியர் மு. வரதராசனார் தலைமை வகித்தார்.

பேராசிரியர் அ. சீனிவாச ராகவன் அவர்கள் பக்தியும், இசையும், மக்கள்பால் பரிவும் இயக்க, கோபாலகிருஷ்ண பாரதியார் பாடிய நந்தன் சரித்திரக் கீர்த்தனை, இராமலிங்கசுவாமிகளின் அருட்பா ஆகியவற்றைக் குறித்து முதல் நாள் பேசினார்கள். அடுத்த நாள் கிறிஸ்துவ சமயக் கவிஞர்களாகிய எச். ஏ. கிருஷ்ணப் பிள்ளை, மாயூரம் வேதநாயகம் பிள்ளை ஆகியோரின் கவிதைகள் பற்றியும், பேராசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்களின் ''மனோன்மணீய நாடகம்'' பற்றியும் விமரிசனம் செய்தார்கள். 'மனோன்மணீயம் ஒரு காவிய நாடகம்' என்று பலப்பல சான்றுகள் காட்டி விளக்கியது மிகச் சிறந்த முறையில் அமைந்திருந்தது. மூன்றும் நாளில் தேசியக் கவிஞர் பாரதியாரின் கவிதைகளை விமரிசனம் செய்தார். ஆங்கிலப் புலமையால் ஆய்வுக் கலையில் தாம் பெற்ற அனுபவத்தைப் பேராசிரியர் அவர்கள் தமிழ்க் கவிதையின் ஆய்வுக்குத் தக்க வகையில் பயன்படுத்தி, சிற்சில இடங்களில் கருத்து ஒப்புவமை காட்டிப் பேசிய பேச்சு பெரு விருந்தாக அமைந்திருந்தது. முடிவுரையில் பேராசிரியர் மு. வரதராசனார் அவர்கள் ''பாரதியார்தாம் பேசுகிறாரா, சீனிவாசராகவன் பேசுகிறாரா என்று பிரித்தறியக் கூடாதபடி கவிஞர் வாக்குகளோடு ஒன்றி நின்று பேசினார்'' எனப் பாராட்டினார்.

மூன்று நாட்களும் தமிழ்ப் பேராசிரியர்களும், மற்றும் பல தமிழன்பர்களும் தாய்மார்களும் மழை இருந்தும் பெருந்திரளாக வந்து பேராசிரியர் அவர்களின் பேச்சைக் கேட்டு இன்புற்றதும், பல்கலைக் கழகத்தின் சொற்பொழிவில் ஒரு புதுமைக் காட்சியாகும். தமிழ் வளர்ச்சிக்குரிய பல துறைகளில் பாடுபட்ட கல்கி அவர்களின் பெருமைக்கு இந்தச் சொற்பொழிவு ஒரு சிறந்த நினைவுச் சின்னமாகும்.

— மு. சண்முகம் பிள்ளை




மைக் ஸ்மித்

ஜே. பி. போலஸ்



கைட்

எம். ஸி. ஸி. கிரிக்கெட் கோஷ்டி இந்தியாவுக்கு முதன் முதலில் 1926 — 27ம் வருடம் காப்டன் கில்லிகன் தலைமையில் வந்து ஆடியது. முப்பத்தி நான்கு மாட்சுகள் ஆடி 11 தடவை வெற்றி பெற்று, ஓர் ஆட்டமும் தோல்வியுறாமல் 23 ஆட்டங்கள் வெற்றி தோல்வியின்றி முடிந்ததும் முந்திய சரித்திரமாகும். அப்பொழுது இந்தியா பிரிக்கப்படாததால் கராச்சி, ராவல்பிண்டி, லாகூர் ஆகிய இடங்களோடு ஆஜ்மீர், பம்பாய், கல்கத்தா, சென்னையிலும் இவ்வாட்டங்கள் நடைபெற்றன.

இரண்டாம் தடவை வந்த எம். ஸி. ஸி. குழு, கேப்டன் ஜார்டைன் தலைமையில் வந்தது. இந்தியாவுக்கு இந்தத் தடவை ஒரே ஒரு சாதாரண மாட்சில் வெற்றி கிட்டியது. எம். ஸி. ஸி. குழு 17 இடங்களில் வெற்றி பெற்றது.

ஹோவார்ட் தலைமையில் வந்த எம். ஸி. ஸி. கோஷ்டி 1951 — 52ல் வந்தது இந்தக் குழுவைச் சென்னையில் இன்னிங்ஸ் தோல்வி கொடுத்தது மறக்க முடியாத சம்பவமாகும். மன்காட்டின் அபார பௌலிங் திறமையும், உம்ரிகர், ராய் இணைப்பில் பி. ராய் 111 ரன்களும் உம்ரிகர் 130 அவுட்டாகாமல் எடுத்ததும் அபார சாதனைகளாகும்.



ஸ்டுவர்ட்

1961 — 62ல் எம். ஸி. ஸி. குழு வந்து ஆடியது அனைவருக்கும் நினைவிருக்கும். கல்கத்தா டெஸ்ட்டிலும் சென்னை டெஸ்ட்டிலும் மாபெரும் வெற்றியை இந்தியக் கோஷ்டி பெற்றதை அதற்குள் மறந்து போயிருப்போமா?

இப்பொழுது எம். ஜே. கே. ஸ்மித் தலைமையில் வரும் எம். ஸி. ஸி. கோஷ்டியின் விஜயம் ஐந்தாவது தடவையாகும்.

## காப்டன் எம். ஜே. கே. ஸ்மித்

எம். ஸி. ஸி. குழுவின் காப்டனாக வரும் எம். ஜே. கே. ஸ்மித் நமக்குப் பழக்கமானவர்தான். சென்ற தடவை சென்னையில் நடந்த டெஸ்ட் மாட்சில் வந்து 'ஸிக்ஸர்' அடித்து நம்மையெல்லாம் அதிசயிக்கவைத்தவராயிற்றே! கண்ணாடி யணிந்துள்ள இந்த மனிதர் கரெக்டாகப் பந்தை அடிக்கும் சாமர்த்தியம் படைத்தவர். இவர் ஆக்ஸ்போர்ட் ஆட்டக்காரர். கேம்பிரிட்ஜுக்கு எதிராக மூன்று வருடங்கள் தொடர்ச்சியாகச் சதம் போட்டது ஒரு சரித்திரமாகும்.

## கே. எப். பாரிங்டன்

இங்கிலாந்தின் அசைக்க முடியாத பாட்ஸ்மன் கே. எப். பாரிங்டனும். இவரது ஆட்டத்தையும் நாம் சென்னையில் பார்த்திருக்கிறோம். சர்ரேயைச் சேர்ந்த பாரிங்டனுக்கு இப்பொழுது முப்பத்துமூன்று வயதாகிறது. ஆஸ்திரேலிய கோஷ்டிக்கு எதிராக எல்லா டெஸ்டுகளிலும் ஆடிப் புகழ் பெற்றிருக்கிறார். இவர் கிரிக்கெட் ஆட்டத்தைத் தம் தொழிலாகக் கொண்டவர்.

## எம். ஜே. ஸ்டுவர்ட்

வார்ட்ஸ் டெஸ்ட் பந்தயத்தில் மேற்கிந்தியத் தீவுக் கோஷ்டிக்கு எதிராக ஆடும்பொழுது கௌட்ரியின் கையில் நன்றாக அடிபட்டுவிட்டதால் இன்னும் பூரணமாக குணமாகி இந்தியாவில் நடக்கும் டெஸ்ட் மாட்சுகளில் கலந்து கொள்ளும் பாக்கியம்

இட்டவில்லை. அவரது இடத்தை ஓரளவு இட்டு நிரப்பக் கூடியவர் ஸ்டூவர்ட். இவர் ஆட்ட முதலில் வந்து ஆடத் தொடங்கினால் எண்ணிக்கைகளைக் குவிக்காமல் திரும்ப மாட்டார். இவரது ஒரு நாளைய ஆட்டம் இங்கிலாந்துக்குப் பெருமையைத் தேடிக் கொடுத்திருக்கிறது. அது மட்டுமல்ல; விக்கெட்டுக் கருகில்நின்று பீல்டிங் செய்யத் தொடங்கினால் இந்தியக் கோஷ்டிக்கு சிறிது கஷ்டம்தான்!

### ஜே. பி. போலஸ்

நாட்டிங்கம்ஷயர் வாசியான இவரது ஆட்டத்தில் அவ்வளவு அழகோ, கவர்ச்சியோ இல்லாவிட்டாலும் மிகுந்த துணிச்சலோடு பந்தைத் தாக்கும் திறன் மெச்சத் தகுந்தது: விக்கெட் இழந்தாலும் சரி, எந்தப் பயங்கரப் பந்தையும் தாக்கும் துணிச்சல் பெற்றவர். இருபத்தியொன்பதே வயதான போலஸ் இதுவரை இருபது டெஸ்ட்களில் கலந்து கொண்டிருக்கிறார்.

### ஜே. எச். எட்ரிச்

மேற்கிந்தியக் கோஷ்டியில் பயங்கரமாகப் பந்தை வீசக் கூடியவர்கள் ஹாலும், கிரிப்பித்தும். இவர்கள் வீசும் பந்தையும் சளைக்காமல் அடிக்கும் வல்லமை பெற்றவர் எட்ரிச். இருபத்தியாறு வயசேயுள்ள இவர் இடது கை ஆட்டக்காரர். இவர் கூடவே பிறந்தது துரதிர்ஷ்டம். இவர் கைகால்களில் அடிபட்டுப் பலதடவை ஆட முடியாமல் போய்விடுவது வழக்கம்.

### பி. ஜே. ஷார்ப்

கத்தி முனையில் 'ஷார்ப்' இருக்கிற மாதிரி பீல்டிங்கில் ரொம்பத் துருதுருப்போடு விளங்குகிறவர் ஷார்ப். 'ஸ்லிப் பீல்டிங்'கில் பிரசித்தி பெற்றவர்களில் இவரும் ஒருவர். மூன்றே டெஸ்ட்டுகள்தான் இதுவரை ஷார்ப் ஆடியிருக்கிறார். இருபத்தியாறு வயதுள்ள இவர் 'பள்ளியில் கிரிக்கெட் பயின்றவர். அப்படியே கிரிக்கெட்டையே தொழிலாகக் கொண்டுவிட்டார்!

### ஜே. டி. எப். லார்ட்டர்

இங்கிலாந்தில் உன்னதமான பந்து வீச்சு நிபுணர் என்று ட்ருமன் பெயர் வாங்கியவர். ட்ருமன் — ஸ்டாதம் ஜோடி பௌலிங்கில் அபார சாதனை செய்து வந்தது அனைவருக்கும் தெரியும். ஸ்டாதம் இடத்தை இன்று லார்ட்டர் இட்டு நிரப்புகிறார். நான்கு டெஸ்ட் பந்தயங்களில் விரைவாகப் பந்தை வீசி நல்ல பெயரைத் தட்டிக் கொண்டவர்.


லார்ட்டர்

### ஜே. பி. மார்ட்டிமர்

லைசெஸ்டர்ஷயர் ஆட்டக்காரரான மார்ட்டிமோர் ஓர் ஆல் ரவுண்டர். நம் இந்திய நாட்டில் உம்ரிகர் மாதிரி சகல கலா வல்லவர். பந்தை நன்றாக வீசுவார்; பீல்டிங்கில் அசகாய சூரர்; பந்தைப் பல கோணங்களில் அடிப்பதிலும் சமர்த்தர். முப்பது வயதுள்ள இவர் இதுவரை ஐந்து டெஸ்டுகளில் கலந்து கொண்டிருக்கிறார். 1959ம் வருஷத்தில் 1060 ரன்கள் எடுத்து, 113 விக்கெட்டுகளை வீழ்த்தியது இவரது கிரிக்கெட் சரித்திரத்தின் சாதனைகளில் ஒன்று.

### ஜே. ஜி. பிங்க்ஸ்

கிரிக்கெட் ஆட்டத்தில் விக்கெட் கீப்பரின் பங்கு முக்கியமானது. இவர் பந்தைப் பிடிப்பதில் கோட்டை விட்டாலோ அல்லது பந்தைத் தேக்குவதில் அசிரத்தையாக இருந்தாலோ ரன்கள் விஷம்போல் விறு விறுவென்று ஏறிவிடும். பிறகு 'எக்ஸ்டிரா' ஆட்டக்காரருக்குப் பெரும் புகழும் வந்துவிடும். கருமமே கண்ணாக, விக்கெட்டே குறியாக, பந்தை நிலைக்கனாகக் கொண்டு கண் அயராமல் செயலாற்றும் விக்கெட்கீப்பர்களில் யார்க்ஷயர் பிங்க்ஸ் முதன்மையானவர்.

### எப். ஜே. டிட்மஸ்

ஒரு கோஷ்டிக்குச் சிலபேராவது 'ஆல் ரவுண்ட'ராக இருக்க வேண்டியது அவசியம். சமயத்துக்கு ஒத்தாசை செய்ய அவர்கள் இருப்பது நல்லது. மிடில்செக்ஸ் டிட்மஸ் அத்தகைய ஆல்ரவுண்டர்களில் ஒருவர்.


மார்ட்டிமர் ஜிம் பார்க்ஸ் டான் வில்ஸன் காலின் கவுட்ரி பிங்க்ஸ்

தென்னாப்பிரிக்கா கோஷ்டிக்கெதிராக 1955ம் வருஷம் டெஸ்ட் பந்தயம் ஆடியிருக்கிறார்.

**பி. ஆர். நைட்**

இருபத்தைந்து வயதான நைட் நமக்கு அறிமுகமானவர். இரண்டாவது தடவையாக இவர் இந்தியாவுக்கு வருகிறார். எஸெக்ஸ் பேர்வழியான இவர் உக்ரத்தோடு ஆடித் தம்மை ஒரு நிரந்தர டெஸ்ட் ஆட்டக்காரராக ஆக்கிக் கொண்டால் அதில் அதிசயமில்லை.

**ஜே. எம். பார்க்ஸ்**

முப்பத்தோரு வயதான பார்க்ஸ் 1963ல் நடைபெற்ற மேற்கிந்தியத் தீவு கோஷ்டிக்கெதிராக முதல்தர விக்கெட் கீப்பர் என்ற புகழைச் சம்பாதித்துக் கொண்டிருக்கிறார்.



ஷார்ப்



கென் பாரிங்டன்

இவர் வெறும் விக்கெட் கீப்பர் மட்டும் அல்ல. அருமையான பாட்ஸ்மன். ஆங்கில கோஷ்டி சரிந்து விழுகிறபோதெல்லாம் விடுவிடுவென்று சதம் சதமாகக் குவித்தது இவரது மற்றொரு சாதனை. காப்டன் டெக்ஸ்டர் பார்க்ஸ் பார்ட்னர்ஷிப் கிரிக்கெட் ரஸிகர்களுக்கு ஓர் அரிய விருந்தாயிருந்தது.

**ஜே. எஸ். ஈ. ப்ரைஸ்**

இருபத்தியாறு வயது இளைஞரான ப்ரைஸ் இடதுகை ஆட்டக்காரர்; வலது கைப்பந்து வீச்சு நிபுணர். ஆச்சரியமாக இல்லையா? முதன் முதலில் வரும் பந்து வீச்சு நிபுணர்களிலே இவரும் ஒருவராயிருப்பார். இவர் மிடில் ஸெக்ஸைச் சேர்ந்தவர்.



ஜோன்ஸ்

**ஐ. ஜே. ஜோன்ஸ்**

கிளாமோர்கனைச் சேர்ந்த ஜோன்ஸ் எம். ஸி. ஸி. கிரிக்கெட் கோஷ்டியிலேயே இளைஞர் இருபத்தியொரு வயது. ஆனால் பந்து வீச்சில் முதன்மையானவர். இளைஞர்களை முன்னுக்குக் கொண்டு வரவேண்டும் என்ற ஆவல் எம். ஸி. ஸி. தேர்வாளர்களுக்கு இருக்கிறது என்பதை இவரைத் தேர்ந்தெடுத்ததிலிருந்து தெரிந்து கொள்ளலாம். இவருக்கு இந்திய டெஸ்ட் பந்தயங்களே முதல் அனுபவம்.

**டி. வில்ஸன்**

இந்திய நாட்டில் குப்தே விக்கெட்டுகளைச் சடசடவென்று வீழ்த்தியது போல் வில்ஸன் தமது மெதுவான பந்து வீச்சால் ஆட்டக்காரர்களைத் தடுமாறச் செய்யக் கூடியவர். இவருக்கு

டிட்மஸ்



இந்திய டெஸ்ட் பந்தயங்களே முதல் டெஸ்ட் அனுபவமாயிருக்கப் போகிறது.

எம். ஸி. ஸி. கிரிக்கெட் கோஷ்டியில் லார்ட்டர், ஜோன்ஸ், ப்ரைஸ் ஆகிய விரைவாகப் பந்து வீசும் மூன்று நிபுணர்கள் இருக்கிறார்கள். மெதுவாகப் பந்து வீச வில்ஸன் இருக்கிறார். பிங்ஸும், பார்க்ஸும் விக்கெட் கீப்பர்களாகப் பணியாற்றவிருக்கிறார்கள். நைட், மார்ட்டிமர், டிட்மஸ் ஆகிய மூன்று 'ஆல்ரௌண்டர்'கள் ஒத்தாசை செய்யவிருக்கிறார்கள். எட்ரிச்சும், போலஸும் ஆரம்ப மட்டையடி வீரர்களாக இருப்பார்கள். இவர்களுக்குக் கை கொடுக்க காப்டன் எம். ஜே. கே. ஸ்மித்தும், பாரிங்டனும் இருக்கிறார்கள்.

இந்தியக் கோஷ்டி சென்ற தடவை டெக்ஸ்டர் தலைமையில்



ப்ரைஸ்



எட்ரிச்

வந்த எம். ஸி. ஸி. கிரிக்கெட் குழுவைக் கல்கத்தாவிலும் சென்னையிலும் தோல்வியுறச் செய்து பாரதத்துக்குப் பெருமை கொடுத்தது. இந்தத் தடவை ஆட்டம் எப்படி இருக்கும் என்பதைக் காண எல்லோருக்கும் ஆவல் அதிகமாயிருக்கும். வரும் 1964ம் ஆண்டு ஜனவரி 10, 11, 12, 14, 15 தேதிகளில் சென்னை ஸ்டேடியம் மைதானத்தில் கண்டு விடலாம். முதல் டெஸ்ட் பந்தயம் நம் சென்னை நகரத்தில்தான் ஆரம்பமாகிறது. இப்போதே டெஸ்ட் மாட்ச் களை கட்டிவிட்டது. நம்மை மகிழ்விக்கப் போகும் இங்கிலாந்து எம். ஸி. ஸி. கிரிக்கெட் விருந்தினரைக் குதூகலத்துடன் வரவேற்கிறோம்.

## கலை வளர்க்கும் கோயில்கள்

# கர்நாடக சங்கீத மத்தியக் கல்லூரி

டிசம்பர் மாதம் பிற்பகுதி என்றாலே சென்னை ரசிகர்களுக்குக் கொண்டாட்டம்தான். காலைப் பனிக்கு எவ்வளவு தூரம் அஞ்சி, கம்பளியால் காதுகளையும் உடலையும் போர்த்திக் கொண்டு படுத்திருக்க விரும்புகிறார்களோ, அத்தனைக்கத்தனை மாலை வேளைகளில் பல சபாக்கள், சங்கங்கள் செய்யும் இசைப் பணிக்குக் கொஞ்சம்கூட அஞ்சி ஒதுங்காமல் காதுகளைத் தீட்டிக் கொண்டு இசை மழையை ரசிக்க நிமிர்ந்து உட்காரத் தயாராகிறார்கள். சங்கீத சீஸன் முடியும் வரை முதுகு வலியை மறந்துவிடுகிறார்கள். வாலிப வித்துவான்களின் திறமை பற்றியும், வயோதிக வித்வான்களின் அருமை பற்றியும் ஒரே மூச்சில் விமரிசிக்கவும் தொடங்குகிறார்கள்.

முன்காலம் போலப் பழைய சங்கீதப் பரம்பரையையும் புதிய சங்கீதப் பரம்பரையையும் இணைக்கும் ஒரு குருகுல வாசத்திற்கு இந்தக் காலத்தில் வசதியில்லை. காரணம், முன்போல அனுபவம் மிக்க சங்கீத மேதைகள் கிராமாந்தரச் சூழ்நிலையில் நிம்மதியாக வாசம் செய்து, சிஷ்யகோடிகள் அவர்களைத் தேடிவரும் நிலை இன்றில்லை.

சங்கீதத் துறையில் குருகுல வாசத்தை ஓரளவு நவீன பாணியில் வருங்கால வித்துவான்களுக்கு இந்தக் காலத் இல் அளிப்பது சங்கீதக் கல்லூரிகள் என்று குறிப்பிடலாம். அவைகளில் சென்னை அடையாறு பகுதியில் உள்ள கர்நாடக சங்கீத மத்தியக் கல்லூரி ஒன்றாகும்.

'சங்கீதப் பயிற்சிக்கு அத்தியாவசியமானது எது?' என்று ஒரு குரு தன் சிஷ்யர்களைப் பார்த்துக் கேட்டார்.

"சாரீரம்" என்றான் முதல் சிஷ்யன்.

"ஞானம்" என்றான் இரண்டாவது சிஷ்யன்.

"அமைதி" என்றான் மூன்றாமவன்.

மூன்றாவது ஆசாமியின் பதில்தான் குருநாதரின் 'சபாஷ்' பாராட்டுதலைப் பெற்றது. இந்த அமைதி அடையாற்றங் கரையில் எழுந்து நிற்கும் 'பிராடீஸ் காஸில்' மாளிகையில் பூரணமாக நிலவுகிறது. அதுவே அங்கு பயிலும் மாணவ மாணவிகளின் சங்கீத வளர்ச்சிக்கு அஸ்திவாரமாக அமைகிறது.

கல்லூரிக் கட்டிட முகப்பை நெருங்கு முன்பே பக்கத்திலிருந்த பூச்செடிகளின் வரிசைக்குப் பின்னாலிருந்து அடாணா ராக ஆலாபனை செவிகளில் அலை மோதியது. இரண்டு மாணவிகள் நிம்மதியாக அங்கு உட்கார்ந்து சாதகம் செய்து கொண்டிருந்தார்கள். கல்லூரி எப்படிச் செயல்படுகிறது என்பதைத் தெரிந்துகொள்ளுமுன்பே உள்ளத்தில் சங்கீதக் களை கட்டி விட்டது. அந்த அடாணா போதையிலே அடிகள் சில கடக்கு முன்பே கல்லூரிக்கட்டிட போர்டிகோவை நெருங்கியாகி விட்டது. அங்கு மயங்கி நிற்கும்படியான மற்றொரு அனுபவம். ஏழெட்டு மாணவிகள் புன்னாகவராளி ராகத்தில் கோஷ்டி கானமாகப் பயின்று கொண்டிருந்தார்கள். மெய் மறந்து சில விநாடிகள் நின்று அந்த இசைப் பயிற்சி வெள்ளத்தில் மூழ்கி விட்டுத்தான் கல்லூரி முதல்வரைப் பார்க்க மாடிப் படிகளில் ஏறமுடிந்தது.





வாத்தியங்களிலும் வாய்ப்பாட்டிலும் பயிற்சி செய்து கொண்டிருக்கும் மாணவிகள்.





கல்லூரியும் கல்லூரித் தலைவர் ஸ்ரீ முசிரி அவர்களும்.

அந்த இசை இனிமையி லிருந்தே கல்லூரி ஆசிரியர் களின் போதனைத் திறமையை யும் மாணவ மாணவிகளின் உழைப்பின் சாதனையையும் ஊகித்துக் கொள்ள முடிகிறது.

கல்லூரி முதல்வர் சாந்த துக்காராமாக அமர்ந்து புன்ன





கையுடன் வரவேற்றார். சாக்ஷாத் முசிரி சுப்ரமணிய அய்யர் வேறு எப்படி இருப்பார்? கல்லூரி ஆரம்பித்த நாளிலிருந்தே இரு முசிரி இங்கு முதல்வராகப் பணியாற்றி வருகிறார்.

''இது இசைப் பயிற்சியைப் பொறுத்தவரை ஒரு 'போஸ்ட் கிராஜுவேட்' கல்லூரிதான் ஏற்கனவே பி. ஏ. பட்டத்தில் சங்கீதத்தைப் பயின்று தேர்ச்சி பெற்றவர்கள் எல்லோரும் இங்கு பயில்கிறார்கள்'' என்றார் முதல்வர்.

''இங்கு சேர விரும்புகிறவர்களுக்குக் குறைந்த பட்சக் கல்வி இவ்வளவு இருக்கவேண்டும் என்று ஏதாவது நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறதா? இங்கு பயிற்சி பெறும் அத்தனை மாணவ மாணவிகளும் ஏற்கனவே பட்டம் பெற்றவர்களாக இருக்கமுடியாதே?'' ''உண்மை! சில தகுதியான விண்ணப்பதாரர்களிடம் இந்த வரையறையை அனுஷ்டிப்பதில்லைதான். அவர்களுடைய சாரீரநயமும், முன் பயிற்சி அனுபவமும் அவர்களுக்கு உதவியாக அமைகின்றன. ஆனாலும் ஓரளவு உயர்நிலைப் பள்ளிப் படிப்பாவது இருந்தால் நலம் என்று நினைக்கிறோம்.''

''ஏன்?''

''இங்கு, இசைப் பயிற்சி அளிப்பதோடு அல்லாமல் இசை வித்தகர்களைப் பற்றியும் அவர்களுடைய வாழ்க்கைச்

---

உண்மையிலேயே கோட்டு அடிக்கிறார்கள்!

---



சரிதங்களையும் இசை அமைப்புக்கள் பற்றியும் பாடங்கள் போதிக்கிறோம். அவற்றைப் புரிந்துகொண்டு சங்கீதக் கலை சம்பந்தமான புத்தகங்களைப் படித்துத் தெரிந்து கொள்ள அடிப்படைக் கல்வியும் தேவை அல்லவா?''

இரண்டாயிரம் வருட காலத்துக்கு முன்பே முழுமை பெற்ற பாரதத்தின் இசைக் கலையைப் பற்றி இங்குள்ள வாசகசாலையில் அபூர்வமான புத்தகங்கள் உள்ளன. அவை இந்தக் கல்லூரி மாணவ மாணவிகளுக்கு நன்கு பயன்பட வேண்டும் என்று முதல்வர் விரும்புவதில் வியப்பு ஒன்றும் இல்லையே!

இங்கு இரண்டு வருட இசைப் பயிற்சிக்கான வசதி இருக்கிறது. எழுத்துப் பரீட்சையிலும் பாடிக் காண்பிக்கும் தேர்விலும் வெற்றி பெறுபவர்களுக்கு 'வித்வான்' பட்டம் கொடுக்கப்படுகிறது. சில மாணவ மாணவிகளை அவர்களுடைய முன் பயிற்சிக் குறைவின் காரணமாக பிரீ–வித்வான் (Pre-Vidwan) என்ற பிரிவில் சேர்த்துக் கொண்டு பூர்வாங்கமாக ஓர் ஆண்டுப் பயிற்சி அளித்துப் பிறகு வித்வான் வகுப்பில் இரண்டு வருடம் படிக்க வகை செய்கிறார்கள்.

இங்கு வாய்ப்பாட்டு மாத்திரம் சொல்லிக் கொடுக்கப்படுவதில்லை. வீணை, பிடில், கோட்டு வாத்தியம், புல்லாங்குழல், மிருதங்கம், நாதஸ்வரம், தவுல் முதலிய வாத்தியப் பயிற்சிகளும் அளிக்கிறார்கள். மற்ற கலைக் கல்லூரிகளில் முக்கிய பாடங்கள், உப பாடங்கள் என்று எடுத்துப் படிப்பது போல் இங்கும் இரண்டு வித வித்தைகளை முக்கிய பாடமாகவோ, உபபாடமாகவோ எடுத்துப் படிக்க வேண்டும்.

சங்கீதக் கலை வளர்ச்சியின் சரித்திரமும், பொது சங்கீத சாஸ்திரமும், எல்லாப்பிரிவுகளைச் சேர்ந்த மாணவி மாணவர்களுக்குமே கட்டாயமாகப் போதிக்கப்படுகின்றன.

இங்கு ஆசிரியர்களாகப் பணியாற்றுபவர்கள் எல்லாருமே அவரவர்கள் துறையில் பிரசித்தி பெற்றவர்கள். தமிழ் நாட்டு சங்கீத ரசிகர்களுக்கு நன்கு பரிச்சயமானவர்கள்.

வாய்ப்பாட்டுத் துறையில் முதல்வர் திரு முசிரிக்குத் துணையாக, திருமதி பிருந்தா (பிருந்தா, முக்தா-சகோதரிகளில் மூத்தவர்) திரு வி. கே. நாராயணசாமி, திரு டி. எம். தியாகராஜன் ஆகியோர் பணி செய்கிறார்கள்.

திரு வரகூர் முத்துசாமி ஐயரும், பரூர் அனந்தராமனும் பிடில் பாடங்களை கவனித்துக் கொள்கிறார்கள். எம். ஏ. கல்யாண கிருஷ்ண பாகவதரும் தேவகோட்டை நாராயண ஐயங்காரும் வீணை சொல்லித் தருகிறார்கள். சங்கீத பூஷணம் திரு எஸ். ராமநாதனும், திரு பாலகிருஷ்ணனும் சங்கீத பாட போதனையை மேற்பார்க்கிறார்கள்.

பகுதி நேர (Part Time) போதனையாளர்களாக, திரு பூதலூர் கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகளும், திரு காரைக்குடி முத்து ஐயரும் கோட்டு வாத்திய, மிருதங்கக் கலைஞர்களுக்கு முறையே பயிற்சியளிக்கிறார்கள். மற்ற துறைகளில் பணியாற்றுபவர்களும் நிறைந்த அனுபவம் பெற்றவர்கள்.

பாரதத்தின் இசைக் கலையைப் பயில பிரான்ஸ் நாட்டு யுவதி ஒருத்தி உபகாரச் சம்பளம் பெற்று இங்கு தங்கியிருக்கிறாள்.

நாதஸ்வரம், தவில் கற்கும் மாணவர்களுக்கு முழுச் சம்பளச் சலுகை இங்கு அளிக்கப்படுகிறது. இதைத் தவிர எட்டு நாதஸ்வர மாணவர்களுக்கும் நான்கு தவில் மாணவர்களுக்கும் மாதம் முப்பது ரூபாய் வீதம் உபகாரச் சம்பளமும் வழங்க ஏற்பாடு செய்கிறார்கள். மற்ற மாணவ மாணவிகளுக்கு ஆண்டு ஒன்றுக்கு எழுபத்தைந்து ரூபாய் கட்டணம்.

மாணவிகளுக்கு என்று ஒரு தனி ஹாஸ்டலும் கல்லூரி வட்டத்துக்குள்ளேயே இயங்கி வருகிறது. சுமார் முப்பது மாணவிகள் இங்கு தங்கி யிருக்கிறார்கள். பொதுவாக இந்தக் கல்லூரியில் மாணவிகளின் எண்ணிக்கைதான் அதிகம். சுமார் நூறு மாணவிகளும் பத்து மாணவர்களும் பயிற்சி பெறுகிறார்கள். மாணவிகளிலும் வாய்ப்பாட்டை முக்கிய பாடமாக எடுத்துப் பயிலுபவர்கள் அதிகம்.

கேரளம், மைசூர், ஆந்திரப் பிரதேசங்களிலிருந்தும் மாணவிகள் இந்தக் கல்லூரியில் சேர்ந்து படிக்கிறார்கள்.

பலமொழிகள் பேசுபவர்களுக்குச் சொல்லித் தருவதில் உள்ள சங்கடத்தைப் பற்றிக் கேட்டபோது, ''ஸ்வாதித் திருநாள் கீர்த்தனங்களையும் தியாகய்யர் உருப்படிகளையும் புரந்தரதாசர் பதங்களையும் கோபாலகிருஷ்ண பாரதியின் பாடல்களையும் கவனம் செய்யும் இந்த மாணவ மாணவிகள் நாளடைவில் ஒரே பாஷையில் பேசிப் பழக ஆரம்பித்து விடுகிறார்கள். அது சங்கீத பாஷை!'' என்றார் ஓர் ஆசிரியர்.

கேரள ராஜ்யத்தில், ஒவ்வொரு பள்ளிக்கூடத்திற்கும் ஒரு சங்கீத ஆசிரியர் நியமிக்கப்படுவது போல் தமிழ் நாட்டிலும் நியமிக்கப்படுவதாக இருந்தால் அதிக மாணவர்கள் இசை பயில வருவார்களோ என்னவோ?

மத்திய கர்நாடக சங்கீதக் கல்லூரியைச் சுற்றிப் பார்த்த பிறகு, அத்தனை லலித கலைகளுக்குமே இசைதான் அடிப்படை என்பதை உணர்ந்து கொள்ள முடிந்தது. இதைப் பத்தாவது நூற்றாண்டைச் சேர்ந்த தனஞ்சயரின் தசரூபகத்திலேயே நாம் காணலாம்.

ஒரு மன்னனிடம் சகல கலைகளிலும் தேர்ந்த முனிவர் ஒருவர் வந்து சேர்ந்தார். மன்னன் அவரிடம் சிற்ப சாஸ்திரம் பயில விரும்பி தன் ஆசையை வெளியிட்டான்.

''ஓவியக் கலையின் தத்துவத்தை அறியாதவர்களால் சிற்பம் பயில முடியாதே!'' என்றார் முனிவர்.

''ஓவியக் கலையையே முன்னால் கற்றுக் கொடுங்கள்.''

'' நாட்டியக் கலை தெரிந்தாலல்லவா ஓவியம் வரும்.''

''நாட்டியக் கலை கற்கத் தயார்.''

''தந்தி தான வாத்தியங்களின் ஞானம் நாட்டியத்துக்கு அவசியமாயிற்றே!''

''அதற்கும் தயாராக இருக்கிறேன்.''

''ஆனால் அதற்கு அடிப்படையான வாய்ப்பாட்டு ஞானம் வேண்டுமே. அதல்லவா மற்ற எல்லாக் கலைகளுக்கும் ஆதாரம்?'' என்று முடித்தார் முனிவர்.

முதல்வர் திரு முசிரியிடம் விடைபெற்று வெளியே வந்த போது பக்கத்து மரத்தடியிலிருந்து மத்தியமாவதி ராக ஆலாபனை காதில் கணீரென்று ஒலித்தது.

# பாலின் குணங்கள் அடங்கியது...




## காட்பரீஸ்
## மில்க் சாக்கலேட்

மிட்டாய் மட்டுமல்ல ... ஒரு உணவும் கூட!

C F Y -7-TAM






# ஸ்திரீகளுக்கு நகைச்சுவை உண்டா?




"ஸ்திரீகளுக்கு ஹாஸ்யச் சுவை கிடையாது. இருந்தாலும் அது ஏதோ பெயருக்குக் கொஞ்சம் இருக்கும்'' என்றுதான் எல்லோரும் அபிப்பிராயப்படுகிறார்கள்.

ஏனோ அப்படி?

கடவுள் சிருஷ்டியில் மனிதப் பிராணி ஒன்றுதான் சிரிக்கும் பிராணி. ஆண்டவன் அந்தப் பிராணியைப் படைக்கும்போது ''ஏ! ஆணே! இந்தா உனக்கு ஒரு மரக்கால் நகைச் சுவை. ஏ, பெண்ணே! இந்தா உனக்கு ஒரு பிடிமட்டுமே நகைச் சுவை!'' என்று அளந்து கொடுக்கிறார் என்று சொல்வதற்கில்லை.

ஸ்திரீகள் பல லட்சக் கணக்கான வருடங்களாகப் பலசாலிகளான ஆண்களின் அதிகாரத்துக்கும் கொடுமைக்கும் உட்பட்டு வந்திருக்கிறார்கள். இந்தியா போன்ற தேசங்களிலோ இந்தப் போக்கைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. கணவனே கண்கண்ட தெய்வமல்லவா? கூழாங்கல், செங்கல்,, பாறாங்கல்லானாலும், அருகம்புல், கோரைப் புல்லானாலும் கணவனல்லவா? ஒரு பெண் வாழைப்பழத் தோலின் மீது காலை வைக்கப் போய்ச் சறுக்கிவிழுந்தால் சிரிப்பு உண்டாகும்.

''இது என்ன நடனம்?'' என்று கணவன் கேட்டுச் சிரிக்கலாம்.

ரொம்பச் சரி! ஆனால் அதே மாதிரி கணவன் 'நடனம்' ஆடும்போது மனைவி சிரிக்கலாமா? பெண்கள் சிரிக்கக் கூடாது; அநேகமாகச் சிரிக்க மாட்டார்கள்.

மாமியார் அம்மாள் இப்படி விழுந்து வைத்தாலோ மருமகள் கட்டாயம் சிரிக்க மாட்டாள். உடல் பதறிப்போக வேண்டும்.

முந்தைய யுகங்களில் மகா யுத்தங்கள் ஏற்பட்டதற்குக் காரணம் ஸ்திரீகளின் நகைச் சுவை உணர்ச்சிதானாம்!

சீதை ராவணனது பத்துத் தலைகளையும், இருபது கைகளையும் பார்த்துக் குபுக்கென்று சிரித்தாளாம். சுயம்வரத்தின்போது அவன் சிவதனுசை வளைக்க முடியாமல் கீழே விழுந்தபோது குபுக் குபுக்கென்று சிரித்தாளாம். இராவணன் அதைப் பார்த்துக் கோபமுற்றானாம்.

பாண்டவர்கள் ராஜசூய யாகம் செய்யும்போது துரியோதனன் பளிங்கு மண்டபத்தின் பக்கம் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான். அப்போது தண்ணீர் இல்லாத இடத்தில் அது இருக்கிறது என்று நினைத்துத் துணியை மேலே தூக்கிக்கொண்டான். தண்ணீர் உள்ள இடத்தில் அது இல்லை என்று நினைத்து நடக்கவே ஆடைகள் நனைந்து போயின. அதைப் பார்த்துத் துரௌபதை சிரித்தாளாம். துரியோதனன் அதனால் கோபமுற்றானாம்.

இந்தச் சிரிப்புக்கள்தாம் இராம இராவண யுத்தத்துக்கும் மகா பாரத யுத்தத்துக்கும் காரணம் என்று பௌராணிகர்கள் சிலர் குட்டிக் கதைகள் விடுகிறார்கள்.

'பெண்கள் சிரிப்பதா?'' என்று திடுக்கிட்டவர்கள் போலக் கேட்பது சர்வ சாதாரணமாகிவிட்டது.



இதற்காகவெல்லாம் பயந்து பெண்கள் சிரிக்காமலிருப்பதில்லை. ஆனால், அது பெரும்பாலும் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டதாய் சந்தர்ப்பச் சூழ்நிலையையும் பொறுத்திருக்கும்.

கணவனும் அவனைச் சேர்ந்தவர்களும் ஒரு பெண்ணைப் பரிகாசம் செய்து வேடிக்கையாக ஏதாவது சொன்னால் அவள் உடனே திருப்பிப் பதில் சொல்வதற்கில்லை. தானும் வேடிக்கையாக அவர்களைக் கேலி செய்து பதிலளிக்கும் உணர்ச்சியை அடக்கிக்கொள்ள வேண்டியிருக்கிறது.

அப்படி அடக்குவது அவளுக்குக் கோபத்தை உண்டாக்குகிறது: இல்லாவிட்டால் கண்களில் நீர் அரும்பச் செய்கிறது. உடனே, பெண்களுக்கு நகைச்சுவை கிடையாது என்று பட்டம் சூட்டி விடுகிறார்கள். இந்த நிலைமையில் அவர்கள் இன்னும் சிரிக்கும் சக்தியை அடியோடு இழந்து விடாமலிருப்பதே ஆச்சரியப்படத்தக்க விஷயம்தான்.

பெண்கள் தங்கள் குழந்தைகளோடு பேசி விளையாடி அனுபவிக்கும் ஹாஸ்ய இன்பத்தை எந்த ஆணும் அனுபவிக்க முடியாது. அவர்கள் உலகத்தில் தனிப்பட்ட ஹாஸ்ய சம்பவங்கள், பேச்சுக்கள் எத்தனையோ உண்டு.

ஓர் அம்மாள் தன் சிநேகிதை வீட்டில் குழந்தைகளைப் பார்ப்பதற்குச் செல்லும்போது ஒன்றிரண்டு சாத்துக்குடிப் பழங்கள் வாங்கிப் போவாள். அதைக் குழந்தையினிடம் கொடுத்து விட்டுத் திரும்ப வாங்கிக் கொள்வாள். அதை உரித்துக் குழந்தைக்கு இரண்டு மூன்று சுளைகள் கொடுப்பாள். பாக்கியைத் 'தானே தின்றுவிடுவது வழக்கம். ஒரு சமயம் ஒரு சிநேகிதை அவளுக்கு வெற்றிலை பாக்குக் கொடுக்கும்போது ஒரு காகிதப் பொட்டணமும் வைத்திருந்தாள். ''இது என்ன?'' என்று அந்த அம்மாள் கேட்டாள்.

''சாத்துக்குடிப் பழத்தின் தோல், விதை எல்லாம் திரட்டிப் பொட்டலம் கட்டி வைத்திருக்கிறேன். தோலைத் துவையல் அரைக்கலாம். விதையைத் தோட்டத்தில் போடலாமே!'' என்று பதில் வந்தது.

ஒரு கல்யாணம் நடந்து கொண்டிருந்தது. மணப்பெண் தன் கழுத்தில் தாலி கட்டப் போகிறபிள்ளைக்குப் பக்கத்தில் மணைமேல் உட்கார்ந்திருந்தாள். பையன் மந்திரங்கள் சொல்லிக் கொண்டிருந்தான். அப்போது பக்கத்தில் நின்ற ஸ்திரீகள் பேசிக் கொண்டார்கள்.

''இந்தப் பெண் எவ்வளவு சிரத்தையாக மந்திரங்களைச் சொல்கிறான் பார்த்தாயா?''

''அவன் மந்திரம் சொல்லவில்லை.. நாளைக்கே தனிக் குடித்தனம் வைக்கணும், நாளைக்கே தனிக் குடித்தனம் வைக்கணும் என்று பிள்ளையிடம் சொல்லிக் கொண்டிருக்கிறான்'' என்று பதில் கிடைத்தது.

ஒரு பெண் புக்ககத்தில் ஒரு நாள் முதன் முதலாகச் சமைத்தாள். கணவனுக்குப் பரிமாறிவிட்டுக் கதவு ஓரம் நின்று கொண்டிருந்தாள். மாமியார் அம்மாள் சற்றுத் தூரத்தில் உட்கார்ந்திருந்தாள். அவன் குழம்புச் சாதம் பிசைந்து வாயில் ஓர் உருண்டை போட்டுக் கொண்டான். பெண் ஏதோ மெதுவாகச் சொல்லி ஜாடைகள் காண்பித்தாள்.

''என்னமோ சொல்கிறாளேடா!'' என்றாள் மாமியார்.

''ஒன்றுமில்லை. சமையல் நன்றாயிருக்கிறதென்று சொல்லச் சொல்கிறாள்'' என்றான் அந்த அசடன்.



சாதாரணமாகச் சிரிப்பு ஹாஸ்ய உணர்ச்சியில்தான் ஏற்படுகிறது என்றாலும் சிரிப்பவர்கள் எல்லாரும் ஹாஸ்ய உணர்ச்சி உள்ளவர்கள் என்பதில்லை. எத்தனையோ பேர் ஒன்றுமில்லாததற் கெல்லாம் சிரித்து வைக்கிறார்கள். வாய்விட்டுப் பெரிதாகச் சிரிக்காமலே கூட நகைச்சுவையை அனுபவிக்கலாம். அதுதான் உயர்ந்த ரகத்தைச் சேர்ந்தது. ரொம்பப்பேருக்கு இது தெரியவேயில்லை!

ஆமாம்! எல்லோருக்கும் எதற்காக நகைச்சுவை இருக்க வேண்டும்? முக்கியமாகப் பெண்களுக்கு அது ஏன் அவசியம்?

அது இருந்தால் எதைப் பற்றியும் சிரித்துக் கொண்டு போய்விடத் தோன்றும். ஆகையினாலே கோபம் ஏற்படாது: கண்களைத் துடைத்துக் கொண்டிருக்கும்படி நேராது. புருஷனுக்கும் மனைவிக்கும் சச்சரவு முற்றாது. குடும்பத்தில் சௌஜன்ய பாவம் ஏற்படும். எந்தக் கஷ்டத்தையும் சகித்துக் கொள்ள முடியும்.

நகைச்சுவை உணர்ச்சி தோன்றவும், அபிவிருத்தி யடையவும் படிப்பு, சம உரிமை சுதந்திரம் முதலியன தேவை. இப்போது நமது தேசத்தில் படிக்கும் பெண்கள் நிறையச் சிரிக்கிறார்கள். வாய் விட்டுச் சிரிக்கிறார்கள்; சிலர் சினிமாப் படங்களில் நடிகைகள் சிரிப்பது போலக் கூடச் சிரித்துப்பார்க்கிறார்கள். எப்படியோ சிரித்து விட்டுப் போகட்டும். சிரித்தால் சரி! அது உள்ளூற வேலை செய்து வந்து கோபத்தையும், பொறுமையையும் விரட்டி அடித்து விடும். மொத்தத்தில் சிரிப்பு உடம்புக்கு நல்லது: தேவையானது.

# உங்கள் கேசம் உதிருகிறதா?

## இந்த மாதிரி அபாயக் குறிகள் அதை அறிவிக்கின்றன.



**கேசம் உதிருதல்**

உங்கள் ரோமம் உதிருகிறது, ஏனெனில், ரோமக்கால்களுக்குப் போதிய ஊட்டமில்லாததுதான்.



**இளமையில் வழுக்கை**

இந்நிலையை நீங்கள் அநேகமாகத் தவிர்த்திருக்கக்கூடும்

பொடுகு, ரோமம் உதிருதல் மற்றும் கேசம் குறைதல் முதலிய உபாதைகளால் நீங்கள் சிரமப்பட்டால் இன்றே ப்யூர் சில்விக்ரீன் உபயோகிக்கத் தொடங்குங்கள். ப்யூர் சில்விக்ரீனில் உங்கள் ரோமத்தின் வளர்ச்சிக்குத் தேவையான எல்லா பதினெட்டு 'அமினோ ஆஸிட்'களும் தீவிரமான வகையிலிருக்கின்றன. தலையில் நன்றாக அழுத்தித் தேய்ப்பதன் மூலம் ப்யூர் சில்விக்ரீன் ரோமக்கால்களில் புகுந்து அவைகளுக்குத் தேவையான இயற்கையான ஊட்டத்தையளித்து, கேசத்தை மறுபடியும் ஆரோக்கியமாக இருக்கச் செய்கிறது.

'ஆல் எபௌட் ஹெயர்' (All About Hair) என்ற, படங்கள் கொண்ட, இலவசப் புத்தகத்தை நீங்கள் பெற விரும்பினால் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்: டிபார்ட்மென்ட் K-2 சில்விக்ரீன் அட்வைஸரி சர்வீஸ் தபால் பை 10022, பம்பாய்-1




**ப்யூர் சில்விக்ரீன்**

கேசம் சம்பந்தமான உபாதைகளுக்குக் குணமளிக்கும் ஓர் மிகத் தீவிரமான தயாரிப்பு. ஒரு மாத கால வைத்தியத்துக்குப் போதுமானது

**சில்விக்ரீன் ஹேர் டிரெஸிங்**

உங்கள் கேசத்தை நாள் பூராவுக்கும் நன்கு சீவியபடி வைக்கிறது. பொடுகு ஏற்படாமல் தடுப்பதற்குப் போதுமான ப்யூர் சில்விக்ரீன் கலந்துள்ளது




# Silvikrin

சில்விக்ரீன் — கேச ஆரோக்கியத்துக்கான வழி

SP/1/P/7/63

**விமலகுமாரி—கீர்த்தி**

''விமலகுமாரி!''

''அத்தான்!''

''நாள்தோறும் சூரியன் உதிக்கிறான், மறைகிறான். அதேபோல்தான் நமது காதலும்...''

''வளர்ந்துகொண்டே செல்கிறது.''

''போதுமானதா அத்தான்?''

''அப்படியென்றால்?..

''கரும்பு தின்னக் கூலி கேட்பீர்கள் போலிருக்கிறதே!''

''திருமணத்தைச் சொல்கிறாயா, குமாரி?''

''கண்டி நாட்டின் தளபதி நீங்கள்...''

''தளபதிதான்.''

''தளபதிக்கு மன்னர் தம் தங்கையைக் கொடுக்க மறுக்கவே மாட்டார்.''

''மறுக்கமாட்டார் என்பது எப்படி உறுதியானதாகும்? ஒருகால் மறுத்தால்?...''

''திருமணம் நடக்காது என்று சொல்லப் போகிறீர்களா, அத்தான்?''

''அப்படியில்லை, குமாரி. நமக்கு எப்படியும் திருமணம் நடக்கத்தான் செய்யும். பலரறிய நடக்கா விட்டாலும் சிலர் அறியவாவது நடக்கத்தான் செய்யும். வாழ்ந்தால் இருவரும் வாழ்வோம். இல்லாவிட்டால்....''

''இணைந்தே மரணத்தை அணைப்போம், அத்தான்.''

''வாழவேண்டிய நாம் மரணத்தைப்பற்றி ஏன் நினைக்க வேண்டும், குமாரி? நமது திருமணத்துக்கான முயற்சியை இப்பொழுதே மேற்கொள்கிறேன். அதோ அமைச்சர் அரண்மனை நோக்கிச் செல்கிறார். நானே சந்திக்கிறேன் கண்ணே.''

**ரங்கநாயகி—ராசாதிராச சிங்கன்**

''சுவாமி!''

''தேவி!''

''இளவரசியின் திருமணத்தை நடத்திவிடலாமே!''

''விமலாவின் திருமணமா?''

''ஆம், சுவாமி. கண்டி நாட்டு இளவரசியும் தங்கள் உடன் பிறந்த தங்கையுமான விமல குமாரியின் திருமணத்தைத் தான் கூறுகிறேன்.''

''மணமகன் யாரென்று சொல்லவில்லையே!''

''ரகுநாதன்.''

''ரகுநாதனா?''

''ஆம் சுவாமி. என் தம்பி ரகுநாதன். தங்களது மெய்க் காவற்படையின் தலைவன்.''

''உன் தம்பி ரகுநாதனா?''

''திருமணப் பொருத்தம் ஏற்றதுதானே, சுவாமி?''

''ரகுநாதனுக்கும் விமல குமாரிக்கும் திருமணம் நடைபெறுவதென்றால், உனக்கும், எனக்கும்தானே அந்தப் பெருமை! அதைத் தொடர்ந்துதானே கண்டி நாட்டு மக்களுக்குப் பெருமை!''

''மக்கள் மகிழவே அரச குலத்துள் சம்பந்தத்தை நிச்சயித்தேன்.''

''அதுதான் சிறந்த ஏற்பாடு, தேவி.''

''திருமண ஏற்பாட்டைப் பற்றி விமல குமாரியிடம்....''

''நீ இன்னும் தெரிவிக்கவில்லையா? இப்பொழுதே சென்று தெரிவித்துவிடு.''

''நல்லது சுவாமி. நான் விமலகுமாரியிடம் சொல்வதைக் காட்டிலும்...''

''நானே சொல்வது நலமென்கிறாயா?''

''ஆம், சுவாமி!''

''நல்லது. அவளை இங்கே வரச்சொல்லு!''

**முல்லிக்கொடே-ராசாதிராச சிங்கன்**

''கண்டி நகரக் காவலா!''

''அமைச்சரே!''

''மன்னா....''



சொல்லுங்கள், அமைச்சரே...''

''தங்களது தங்கையார்...''

''என் தங்கை...''

''ஆம், மன்னா! இளவரசியார் காதல் வலையிலே வீழ்ந்துவிட்டார்.''

''காதல் வலையிலா?''

''ஆம், மன்னா.''

''அவளை அவ்வலையில் வீழ்த்தியவன்யார்?''

''தளபதி!''

''கண்டி நாட்டுத் தளபதியா?''

''ஆம், மன்னா. கண்டி நாட்டுத் தளபதி கீர்த்திதான்!''

''எனது படைகளின் தளபதி கீர்த்தி என் தங்கையைக் காதலிக்கிறானா?''

''ஆம், மன்னா. விமலகுமாரியும் உள்ளம் விரும்பிக் காதலிக்கிறாள்.''

''கடிமணம் செய்து வைக்க வேண்டும். அப்படித்தானே அமைச்சரே?''

''கன்னிப் பெண்ணின் மனத்தில் முதலில் உறைந்தவன் கணவன் ஆகிறான்.''

''மறுத்தால்...''

''வாழ்க்கை சுவையற்றுப் போகும்.''

''இருக்கலாம். ஆனால் அரச குலத்தவரின் திருமண வாழ்க்கை நாட்டின் சட்டத்துக்குக் கட்டுப்பட்டதல்லவா?''

''உண்மைதான், மன்னா! கண்டி நாட்டுத் தளபதி தங்கள் தங்கையை மணந்தால் கண்டி நாட்டு அரசியலுக்குப் பாதுகாப்பாகவே அமையும்.''

''அப்படியும் அமையலாம். இருந்தாலும் சிந்திக்கவேண்டிய விஷயம் அமைச்சரே.''

''சிந்தித்து முடிவுசெய்யுங்கள் மன்னவா!''

### விமலகுமாரி—ராசாதிராச சிங்கன்

''அண்ணா!''

''விமலகுமாரி!...''

''அழைத்தீர்களாமே, அண்ணா.''

''ஆமாம். பருவத்தின் எல்லையிலே நிற்கிறாய். ஆகவே கணவனென்ற காற்கட்டினைச் சேர்த்துவிட வேண்டியவனாக இருக்கிறேன்.''

''அண்ணா!''

''கணவன் யாரென்று அறிந்துகொள்ளத் துடிக்கிறாய்; —உன் உள்ளமே அதனைக் காட்டுகிறது. மணமகன் வேறு யாருமல்ல. நம் ரகுநாதன் தான்!''

''அண்ணா!''

''சொல், விமலகுமாரி!....''

''அண்ணா! எனக்கு என் மண வாழ்க்கையில்கூட உரிமை இல்லையா?''

''யாரும் மறுக்கவில்லை. உரிமையை வகுத்துத் தரவேண்டியவன் நான். அரச குல நியதிக்கேற்பத்தான் என்னால் வாழ்க்கை வகுத்துத் தர முடியும். உன் விருப்பப்படி வகுத்துத் தர முடியாது. நீ அரச குலக் கன்னி என்பதை நினைத்துக் கொள்.''

''இருக்கலாம். ஆனால் உள்ளத்தில் கொண்டவனை மறந்து பெண் இனத்துக்குக் கறை பூசக் கண்டி மன்னவரின் தங்கை விரும்பவில்லை.''

''இத்தனை தூரத்துக்கு உன் காதல் வளர்ந்து விட்டதா?''

'''காதலிப்பது குற்றமென்று கண்டி நாட்டுக் காவலரே சொல்வதை என்னால் நம்ப முடியவில்லை.''

''கண்டிக் காவலனுக்கு அறிவுரை கூறும் தங்கையை இப்போதுதான் காண்கிறேன்.''

''இல்லை, அண்ணா! என் உள்ளத்தைத் திறந்து காட்டுகிறேன். என்னை வாழ விடுங்கள்.''

''உனக்கும் ரகுநாதனுக்கும் திருமணமென்று முன்பே நிச்சயிக்கப்பட்டாயிற்று.. அதனை இனி எந்தச் சக்தியாலும் மாற்றவே முடியாது.''

''உங்களை மன்றாடிக் கேட்கிறேன். என் வாழ்க்கையை நரக வேதனையாக்காதீர்கள். என் கண்ணீரைக் கரையச் செய்யாமல் காதலனுடன் வாழவிடுங்கள்.''

''இனி பேச்சுக்கு இடமில்லை. நாளை முழுமதி நாள். கண்டி நகரம் இப்பொழுதிருந்தே உனது திருமணத்துக்காக விழாக் கோலம் பூணத் தொடங்கி விட்டது. ஆகவே அரச குல நீதிப்படி உனக்கும் ரகுநாதனுக்கும் திருமணம் நடக்கும். இது உனது தமையனது உத்தரவல்ல. கண்டிக் காவலன் ராசாதிராச சிங்கனின் அரச கட்டளை; உத்தரவு; மாற்ற முடியாத உத்தரவு.''

### விமலகுமாரி—கீர்த்தி

''இந்த நள்ளிரவில் ஏன் வந்தாய், குமாரி!''

''தாமதிக்க நேரமில்லை. வெள்ளம் தலைக்கு மேலாக வந்து விட்டது.''

''என்ன சொல்கிறாய்?''

''மன்னவர் நம் காதலை அறிந்து கொண்டு விட்டார்.''

''நான்தானே நம் காதலைச் சொல்லும்படி அமைச்சரை அனுப்பி வைத்தேன். மன்னர் சம்மதித்துவிட்டாரா, குமாரி?''

''சம்மதித்துவிட்டார். எனக்கும் ரகுநாதனுக்கும் திருமணம் செய்துவைப்பதாக....''

''என்ன!....''

''மன்னரது தீர்மானம் அதுதான். நான் கண்ணீர் விட்டுக் கதறினேன். காலிலே விழுந்து கெஞ்சினேன். மன்னர் கருணை காட்டவில்லை. அரசாங்க ஆணையும் பிறப்பித்துவிட்டார்.''

''என்னால் தாங்க முடியவில்லையே, குமாரி.''

''என்னால் மட்டும் தாங்க முடிந்ததா அத்தான்?''

''உன் மென்மையான உள்ளம் தாங்காது.''

''அதனால்தான் உங்களைத் தேடி வந்தேன். நாம் , வாழ்வதா சாவதா என்பதைத் தீர்மானியுங்கள்.''

''தூய்மையான காதலில் கட்டுண்ட நமக்கு ஏன் சாவு, குமாரி? சாவு நம்மைக் கண்டு அஞ்சி ஓட வேண்டும். கண்டி நகரம் நமது காதலை எற்காவிடில் கடல் கடந்து சென்று வாழ்வோம்.''

''அரசாங்க ஆணை துரத்தி வருமே?''

# தென்னகத்தின்
# மாபெரும் வங்கி இணைப்பு

## பாண்டியன் பாங்க் லிமிடெட்
## கனரா பாங்க் லிமிடெட்டுடன்
## 2-12-1963ல் இணைந்தது

சரித்திரத்தில் குறிப்பிடக்கூடிய பாண்டியன் வங்கி, கனரா வங்கி தன்னிச்சையான இந்த இணைப்பு எல்லோரின் நல்லாசியையும் பெற்றுள்ளது.

பாண்டியன் வங்கியின் பெருமை வாய்ந்த தனி முறை தத்துவமும், அதற்கு இணையான கனரா வங்கியின் தலைசிறந்த தமிழ்முறைத் தத்துவம், அநுபவம், நிபுணத்துவம், இவற்றுடன் கனரா வங்கியின் மேம்பட்ட செல்வாக்கும் ஒன்று சேர்ந்த இந்த இணைப்பு தமிழ் நாட்டின் வங்கித் தொழில் அபிவிருத்தியை துரிதப்படுத்தும்.

இந்த மகிழ்ச்சிக்குரிய இணைப்பு பாண்டியன் வங்கியின் கிளைகள் இயங்கிவரும் எல்லா சிறு நகரங்களிலும், கிராமங்களிலும் உள்ள மக்களுக்கு பரிபூரண பாதுகாப்பு, விஸ்தாரமான, நவீன வங்கி சேவை இந்த இரட்டிப்பு நன்மை கூட அளிக்கும்.

தமிழ் நாட்டில் தற்போது 100க்கும் அதிகமான கிளைகளில் அளிக்கப்படும் தனது அநுபவமிக்க சேவையின் அநுகூலங்களை அநுபவித்துப் பயனடையும்படி தமிழ் நாட்டு மக்களை கனரா வங்கி அன்புடன் அழைக்கிறது.



மத்திய காரியாலய கட்டடம்
பாண்டியன் பாங்க் லிமிடெட்
மதுரை



நிர்வாக காரியாலய கட்டடம்
கனரா பாங்க் லிமிடெட்
பெங்களூர்

# கனரா பாங்க் லிமிடெட்

(ஸ்தாபிதம் 1906)

பதிவுக் காரியாலயம்: மங்களூர் - நிர்வாகக் காரியாலயம்: பெங்களூர்

பரிபூரண பாதுகாப்பு — பரிபூரண சேவை

உலக முழுவதும் பிரதிநிதிகள்
தற்போது இந்தியாவின் பல்வேறு வியாபார ஸ்தலங்களில்
235 கிளைகளுக்குமேல் உள்ளன.

CB-103 D

குடும்பத்தினர் அனைவரும் வசதியான,
தரமான, பார்வையான ஆடைகளையணிய . . .

கேட்டு வாங்குவது

# ரோஹித்

ஷர்ட்டிங்குகள்*
கோடுகளுடனோ, இல்லாமலோ

# ரோஹித்

புடவைகள்
. . . ஆடையணிப்
பொருள்கள்

உன்னத நெசவு
உயரிய அமைப்பு



# ரோஹித்

மில்ஸ்
லிமிடெட்
கோக்ரா
மெஹ்மெதாபாத்
அகமதாபாத்-8

ரோஹித் குரூப்  நிறுவனங்களில் ஒன்று

RPY-5 TAM.

''அரசாங்க ஆணையே வராத மலைக் கிராமங்கள் இருக்கின்றன. அமைதியான, வளமான, பாதுகாப்பான நல்தனியாக் கிராமம் இருக்கிறது. நல்தனியாவுக்குப் போய்க் காதல் வாழ்வு நடத்துவோம் கண்ணே!''

''நீங்கள் வாழ்கிற இடம்தான் நான் வாழப் போகிற அரண்மனையாகும். குதிரையின் குளம்பொலி கேட்கிறதே. ஒருகால்...''

''அரச ஆணை தொடர்கிறதென்று கூறுகிறாயா? கலங்காதே, கண்ணே! வா, நாமிருவரும் இப்பொழுதே குதிரையில் ஏறி விடுவோம்.''

**ரகுநாதன்—ராசாதிராச சிங்கன்**

''மன்னவா!''

''ரகுநாதனா? மணக் கோலம் பூண்டு நிற்க வேண்டிய நீ ஏன் சோர்ந்து போய்க் காணப் படுகிறாய்?''

''மணப்பெண்ணைக் காணவில்லை.''

''என்ன! விமலகுமாரியைக் காணவில்லையா?''

''ஆம், மன்னா. விமலகுமாரியைக் காணவில்லை. எங்கும் தேடிப் பார்த்தாயிற்று. கண்டி நகரமெங்கும் சல்லடை போட்டுச் சலித்துப் பார்த்தாயிற்று.''

''தளபதி கீர்த்தி எங்கே?''

''அவரையும் காணவில்லை.''

''இருவரும் சேர்ந்துதான் ஓடியிருக்கிறார்கள். அவர்கள் காதலர்கள்.''

''காதலர்களா?''

''ஆம். அரச குலத்திலுக்கே அவமானம்! துடைக்க முடியாத அவமானம்! எனது உடைவாள் அவர்கள் இருவரது உள்ளத்திலும் பாய்ந்த பின்னர்தான் இந்த அவமானம் துடைக்கப்படும். ரகுநாதா! இப்பொழுதே புறப்படு. அவர்கள் எங்கிருந்தாலும் கண்டு பிடித்து என் முன்னே உயிருடன் கொண்டு வந்து நிறுத்த வேண்டும்.''

''உத்தரவு, மன்னவா.''

''கண்டி நாட்டுப் படைகள் நாலு திக்கிலும் தேடட்டும். ஒற்றர்கள் ஈழமெங்கும் செல்லட்டும். அவர்களை எப்படியும் என் முன்னே கொண்டு வந்து நிறுத்த வேண்டியது...''

''என் கடமை மன்னவா!''

**விமலகுமாரி—கீர்த்தி**

''அத்தான்! உங்கள் மகனைப் பார்த்தீர்களா? உங்களைப் போலவே இருக்கிறான்.''




''ஆமாம் குமாரி... நாம் கண்டி கடந்து நல்தனியாவுக்கு வந்து ஓராண்டும் உருண்டோடிவிட்டது.''

''ஓராண்டு!''

''ஆம், குமாரி. ஓராண்டு பூரணமாகக் கடந்து விட்டது. இதுவரையும் கண்டிக் காவலர் எதுதான் செய்துவிட்டார்?''

''அப்படிச் சொல்லாதீர்கள், அத்தான். மன்னர் என் கண்ணீரைக் கண்டும் கூறிய வார்த்தைகள் என் செவிகளில் ஒலித்துக் கொண்டுதான் இருக்கின்றன.''

''அப்படியென்றால்...''

''மன்னரது ஆணைக்கிணங்க இப்பொழுதும் நம்மைத் தேடிக் கொண்டேதானிருப்பார்கள். ஆனால் நாம் இருக்கும் இடத்தை இன்னும்....''

''கண்டுபிடிக்கவில்லை என்றுதானே சொல்லப்போகிறாய்?''

''ஆம், அத்தான்.''

''நல்தனியாவை மன்னவனென்ன! மகேசுவரனே வந்தாலும் கண்டு பிடிக்க முடியாது.''

''உண்மைதான். நம்மைக் காத்துவரும் இந்தத் துங்குந்த நீர் வீழ்ச்சியே ஒருகால்...''

''ஆபத்தைக் கொண்டு வந்துவிடலாம் என்கிறாயா?''

''இருக்கவும் கூடும்.''

''அப்படிச் சொல்லாதே குமாரி ... எனது உடைவாள் மட்டுமே நூற்றுக்கணக்கானவர்களுக்குப் பதில் சொல்லும்.''

''இருக்கலாம். நாற்புறமும் நம்மைப் படைவீரர்கள் வளைந்துக் கொண்டால், உடைவாள் பயன் தராது, அத்தான்.''

"உண்மைதான்... அதோ அணிவகுத்து வருவது கண்டி நாட்டுப் படை வீரர்களா?"

"ஆபத்து வந்து விட்டது, அத்தான்! அணி அணியாக வருபவர்கள் கண்டி நாட்டுப் படை வீரர்கள்தான், அத்தான்!"

"குமாரி...."

"தப்புவதற்கு வழியே இல்லை. படை வீரரின் கைகளில் அகப்பட்டுக் கைதியாகக் கண்டி நாடு சென்று அவமானப்படுவதைக் காட்டிலும்...."

"உயிரைப் போக்கிவிடுதல் நலம்!"

"நம் மகன்?"

"அவன் வாழ வேண்டும். படை கொண்டு வரும்...."

"ரகுநாதனிடம் ஒப்புவித்துவிடச் சொல்கிறீர்களா?"

"அவனிடம் நம்மால் ஒருபோதும் ஒப்புவிக்க முடியாது குமாரி."

"அப்படியென்றால்?"

"மகனை இந்த இடத்திலே கிடத்திவிட்டு நாம் இருவரும் துங்குந்த நீர்வீழ்ச்சிக்குப் பலியாக வேண்டியதுதான்."

"எனது மகனின் கதி?"

"ரகுநாதன் நம் மகனை எடுத்துச் சென்று கண்டிக் காவலனிடம் கொடுப்பான்."

"இதுதானா அத்தான் நமது கடைசி வழி?"

"வேறு ஒரு வழியும் இல்லை. கண்டிக்கு நாம் கைதியாகச் சென்றால் மன்னனது கழுமரம் நம் இருவரையும் வரவேற்கும். அதைக் காட்டிலும் துங்குந்த நீர்வீழ்ச்சிக்கு நாம் பலியாவதனால் நம் மகனாவது அரச போக வாழ்வு பெற்று வாழ்வான்."

"உண்மைதான், அத்தான்."

"படை வீரர்கள் வளைத்துக்கொண்டு விட்டார்கள். ரகுநாதன் வாளேந்திக் கொண்டு வருகிறான். இனி தாமதிக்க நேரமில்லை. நமது மகனை இப்படிக் கிடத்திவிடு."

"என் மகனே! நாங்கள் போகிறோமடா! கண்டிக்குச் சென்று வாழ் மகனே! உன் மாமன் மன்னனாக இருக்கிறார். உன்னை வாரி அணைத்துக்கொள்வார்."

"குமாரி! ரகுநாதன் வந்து விட்டான். உத்தரவும் பிறப்பித்து விட்டான். மூன்று பக்கமும் படை வீரர்கள். ஒரு கணப்பொழுதில் நம்மைப் பிடித்து விடுவார்கள். வா, கண்ணே! இந்த உலக வாழ்க்கை முடிந்து விட்டது; மறு பிறப்பிலாவது நிம்மதியாக இணைந்து வாழ்வோம். என்னை அணைத்துக் கொள். நான் குதிக்கிறேன். நீயும் சேர்ந்து குதி கண்ணே."

**ராசாதிராச சிங்கன்–ரகுநாதன்**

"ரகுநாதனா?"

"ரகுநாதன்தான் மன்னா."

"உன்னைப் பார்த்தே ஓராண்டுக்கு மேல் ஆகிவிட்டதே!"

"விமலகுமாரி எங்கே? நன்றி மறந்த துரோகி கீர்த்தி எங்கே?"

"கண்டிக்காவலருக்குப் பொறுமை வேண்டும். இதோ அவர்கள்...."

"என்ன!....."

"விமலகுமாரியும் கீர்த்தியும்."

"பால் மணம் மாறாப் பாலகனை கீர்த்தியும் விமலகுமாரியும்."

"ஆம், மன்னா."

"விவரமாய்ச் சொல், ரகுநாதா."

"என்னைக் கண்டவுடனே விமலகுமாரியும் கீர்த்தியும் தாங்கள் பெற்றெடுத்த ஒரே மகனைப் பாறையிலே கிடத்திவிட்டுக் கைகோத்தவாறு துங்குந்த நீர் வீழ்ச்சியிலே குதித்து விட்டார்கள்."

"மரணத்தைத் தழுவிவிட்டார்களா?"

"............"

"விமலகுமாரி! உன் கதி இப்படியா ஆக வேண்டும்!"

"விதி வகுத்த பாதை, மன்னா! காதலின் உயர்வை விமலகுமாரியின் வாழ்க்கையில் தான் கண்டேன். அவள் பெண்ணல்ல. பெண் இனத்தின் தெய்வம். கற்பின் செல்வி."

"கற்பின் செல்வி!"

"கற்பின் செல்வியேதான். அவளுக்கு நாம் செய்யவேண்டிய கடமை அவள் மகனை வளர்ப்பதுதான். அந்த ஒரு கைமாறினைத் தான் நாம் செய்யலாம். விமலகுமாரி பெண் இனத்தின் தெய்வமாகக் கண்டி நாட்டில் உறைந்துவிட்டாள். அவள் ஆத்மா சாந்தி யடையட்டும்."




கச்சிதமான மென்மை, கதகதப்பு ... உங்கள் கம்பளித் துணிகளின் பண்புகளைக் காப்பது: சலவையிலே நருவிசாகப் பராமரிக்கும் லக்ஸ். பட்டு, நைலான், ரெயான், டெரிலீன் ... பாங்கான துணிகள் எல்லாமே பார்க்கப் புதிதாய்ப் பன்னெடுநாள் நீடித்திருக்கத் துணைபுரிவது: தூய, மெல்லினம் லக்ஸ் தூள்களால் சலவை!

அத்தனை நருவிசாக ஆடைகளைக் காப்பது லக்ஸ் ஒன்றே!

ஆ. 21-140 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு




தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

**பா**ரசீகக் கவிஞரான ஓமர்கய்யாம் என்பவனிடம் சுவர்க்கம் எங்கே என்று ஒரு கேள்வி கேட்டிருக்கிறான் ஒருவன். அதற்குச் சுவர்க்கம் என்பது ஏதோ வானுலகத்தில்தான் இருக்கிறது என்று இல்லை. இங்கே இந்த உலகிலேயே இருக்கிறது. ஒரு ரமணீயமான தோப்பு. அங்கு உண்பதற்கு ஒரு ரொட்டித் துண்டு. குடிப்பதற்குக் கொஞ்சம் மது. படிப்பதற்கு ஒரு கவிதைப் புத்தகம். பக்கத்தில் இருந்து இன்னிசை எழுப்ப ஒரு காதலி. இவை மட்டும் அமைந்துவிட்டால் அதுவே சுவர்க்கம்தானே என்று பதில் கூறியிருக்கிறான் அவன். அவன் சொன்னதைக் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை அப்படியே தமிழில் மொழிபெயர்த்து ஒரு நல்ல பாட்டாக நமக்கு அளிக்கிறார்.

**வெய்யிற்கேற்ற நிழல் உண்டு**
**வீசும் தென்றல் காற்றுண்டு**
**கையில் கம்பன் கவி உண்டு**
**கலயம் நிறைய அமுதுண்டு**
**தெய்வ கீதம் பல உண்டு**
**தெரிந்து பாட நீயும் உண்டு**
**வையம்தனில் இவ்வனம் அன்றி**
**வாழும் சொர்க்கம் வேறுளதோ ?**

என்பது பாடல். ஆம். தன் பக்கத்தில் இருக்கும் காதலியைப் பார்த்தே பாடுகிறான் கவிஞன். இப்படிப்பட்ட கற்பனை சுவர்க்கத்தைக் காண வேண்டும் என்றால் ராஜஸ்தானத்தில் உள்ள உதயபுரிக்கே செல்ல வேண்டும் என்பேன் நான். அதுவும் எழில் நிறைந்த அந்த நகரத்தில் பிசகோலா ஏரியில் மிதக்கும் படகுகள் ஒன்றில் மட்டும் காதலியுடன் அமர்ந்து செல்லும் அனுபவம் ஏற்பட்டுவிட்டால், ஓமர்கய்யாமும், தேசிக விநாயகம் பிள்ளையும் சொன்ன சுவர்க்கம் இதுதானோ என்று ஐயுறுவோம். அவ்வளவு ரமணீயமான இடம் அது. அங்கு கடவுள் படைத்த இயற்கை எழிலும் மனிதன் படைத்த கைவண்ணத் திறனும் கைகோத்து உலவுகின்றன. ஊரைச் சுற்றி மலைகளும், அம்மலைகளுக்கு இடையே வளர்ந்திருக்கும் காடுகளும் அமைந்து, இயற்கை அழகை அதிகப்படுத்திக் கொண்டிருக்கும் இத்தகைய சூழ்நிலையிலே அமைந்த நகரம் அது. அங்கு எங்கு பார்த்தாலும் ஒரே சலவைக் கல் அரண்மனைகள்தான். அழகான ஏரிகள். அங்க ஏரிகளைச் சுற்றி வளைந்து வளைந்து செல்லும் பாதைகள். ஏரியின் நடுவிலேயும் அலங்காரமான மாளிகைகள். இத்தனை கோலாகலத்துடன் அமைந்த நகரத்தை இந்தியாவில் வேறு எங்கும் காண முடியாது. அதனால் தானே அது இந்தியாவின் வெனிஸ் என்று பெயர் பெற்றிருக்கிறது.

உதயபுரி செல்ல மேற்கு பிராந்திய ரயில்வேயில் ரட்லம் ஜங்ஷனிலிருந்து 185 மைல் மேற்கு நோக்கி ரயிலில் செல்ல வேண்டும். ரயில்வே ஸ்டேஷன் ஊரின் கிழக் கோடியில் இருக்கிறது. அங்கிருந்து மேற்கு நோக்கி மூன்று மைல் சென்றே உதயபுரியைப் பார்க்க வேண்டும். உதயபுரி இரண்டு பகுதிகளாக இருக்கிறது. பழமையான நகரம் மலைச் சரிவில் இருக்கிறது. பழைய நகரைச் சுற்றி ஒரு பெரிய மதில் சுவர் கட்டப்பட்டிருக்கிறது. அதன் நீளம் ஆறு மைல் என்கின்றனர். ஐந்து அடி அகலம், இருபது அடி உயரமும் உடைய அந்த மதில் சுவரில் பத்து வாயில்கள் அமைத்திருக்கிறார்கள். இவைகளில் நான்கு வாயில்கள் பிரதானமானவை. இவ்வாயில்களில் ஒன்றான கிழக்கு வழியாகத்தான் உதயப்பூர் நகரத்துக்குள்ளே செல்ல வேண்டும். அங்கு முதன் முதல் நம் கண்முன் வருவது மகாராஜாவின் அரண்மனைதான்.

ராஜஸ்தானத்தில் உள்ள அரண்மனைகளிலெல்லாம் பெரிய அரண்மனை இதுதான் என்கின்றனர். இம் மாளிகை ஒரு மகாராஜாவினால் கட்டப்பட்டதல்ல. பல ராஜாக்கள் பல காலம் நினைந்து நினைந்து கட்டியது என்று பேசுகிறது சரித்திர ஏடுகள். சோட்டி சித்ரசாலை, மான மஹால், மோத்தி மஹால், பனிமஹால் என்று பலப் பல பகுதிகள். எல்லாம் சலவைக் கல் கட்டிடங்கள். கண்ணாடிகள் பதித்து அலங்காரம் செய்திருக்கின்றனர். அதிலெல்லாம் இன்றைய இந்தியாவின் தேசியப் பறவையாம் மயில் வண்ணத் தோகை விரித்து ஆடும் காட்சியை வர்ணக் கண்ணாடிகள் மூலம் அமைத்துக் காட்டியிருக்கிறார்கள். இது அற்புதமான காட்சியாக இருக்கும். அரண்மனையில் சித்திரங்களுக்கும் குறைவிருக்காது. அரண்மனை பிச்சோலா ஏரிக் கரையில்தான் இருக்கிறது. இந்த ஏரி மூன்றரைச் சதுர மைல் பரப்பில் அமைந்திருக்கிறது. இதன் தென் வடல் நீளம் மூன்று மைல். கிழ மேல் நீளம் இரண்டு மைல். இந்த ஏரிக்கரையிலிருந்து மேற்கு நோக்கினால் மலைகளும், பசிய நிறத்தோடு கூடிய ஏரித் தண்ணீரும், நவநவமான கனவுலகத்தையே காட்டும்.

ஏரியைக் கரையில் நின்று மட்டும் பார்த்துத் திருப்தி அடைய முடியாது. அங்கு அந்த ஏரியின் நடுவில் இருக்கும் இரண்டு அரண்மனைகளையும் சென்று காண வேண்டாமா? அங்கு போவதற்கு வசதியான படகுகள் இருக்கின்றன. அந்தப் படகுகளுக்குக் கட்டணம் செலுத்தி ஏறிக்கொண்டு ஏரியில் மிதந்து சென்றால் :

**சிந்து நதியின் மிசை நிலவினிலே**
**சேர நன்னாட்டு இளம் பெண்களுடனே**
**சுந்தரத் தெலுங்கினில் பாட்டிசைத்துத்**
**தோணிகள் ஓட்டி விளையாடி வருவோம்**

என்ற பாடல் நம் வாய் நம்மை அறியாமலே முணுமுணுக்கும். படகில் சென்றால் நாம் காண்பது ஜக்மந்திர், ஜக் நிவாஸ் என்னும் இரண்டு அரண்மனைகள். இவை இரண்டில் ஜக்மந்திர்தான் சிறப்பானது.— மொகலாய மன்னனான ஷாஜஹான், அவன் தந்தையின் காலத்தே குர்ரம் இளவரசனாக இருந்தபோது இங்கு வந்திருக்கிறான். இந்த அரண்மனையில் தங்கி யிருக்கிறான். இங்குதான் பின்னர் அவன் தன் மனைவியின் சமாதி மேல் கட்டிய தாஜ் மஹாலின் கரு உருவாகியிருக்கிறது. உலகப் பிரசித்தி பெற்ற கனவு மாளிகையான தாஜ்மஹால் உருவாவதற்கு இந்த ஜக் மந்திர் கருவாய் அமைந்திருக்கிறது என்று சொன்னால் அந்த மாளிகையைப் பற்றி மேலும் சொல்ல வேண்டுமா என்ன?. ஜக் நிவாஸ் மகாராணா ஜகத் சிங்–2 என்பவரால் பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் கட்டப்பட்டது என்று சரித்திரம் கூறுகிறது. நாலு ஏக்கர் விஸ்தீரணத்தில் அமைந்த இந்த அரண்மனையின் உத்தியான வனங்களும், வண்ணப் படங்களும் அலங்காரச் சாமான்களும் மிக மிக அழகாக இருக்கின்றன.

பிச்சோலா ஏரியின் வடபுறம் ஒரு பெரிய ஏரி இருக்கிறது. இதனையே பத்தே சாகர் என்கின்றனர். பழைய ஏரியை மகாராணா பத்தே சிங் புதுப்பித்திருக்கிறார். இதுவும் இரண்டு சதுர மைல் பரந்து கிடக்கிறது. ஏரியைச் சுற்றி அமைந்திருக்கும் பாதை அழகாக வளைந்து வளைந்து செல்கிறது.

இனி ஜகதீசர் கோயிலைச் சென்று காண்போம். இக் கோயில் அரண்மனைக்குச் செல்லும் வழியில்தான் இருக்கிறது. எழுபத்தி ஐந்து லட்சம் ரூபாய் செலவில் மகாராணா ஜகத் சிங் என்பவர் 1650-ல் இக் கோயிலைக் கட்டி முடித்திருக்கிறார். இருபத்தி ஐந்தடி உயரத்திலுள்ள மாடத்தில் எண்பதடி உயரத்தில் கட்டப் பெற்றிருக்கும் கோயில் அது. முப்பத்திரண்டு படி ஏறியே அம்மாடக் கோயிலுள் நுழைய வேணும். கோயில் சுவர்களில் நுணுக்கமான வேலைப்பாடுள்ள சிற்ப வடிவங்கள். கோயிலின் கருவறையிலே சதுர்புஜத்தோடு கூடிய மகாவிஷ்ணு ஜகதீசர் என்ற பெயரோடு நிற்கிறார். ஜகத்சிங் கட்டிய கோயிலில் ஜகதீசன் வந்து குடியேறியிருப்பது பொருத்தம் தானே! இன்னும் இந்த உதயபுரியில் முப்பதுக்கும் மேற்பட்ட சமணக் கோயில்கள் இருக்கின்றன. அவைகளில் இரண்டு பிரசித்தமானவை. ஒன்று சீத்தல் நாதருக்கும் மற்றொன்று வாசு பூஜ்யருக்கும் என அமைந்தவை. இவர்கள் இருவருமே மகாவீரரது வடிவங்கள்தாம் என்கின்றனர். பளிங்குக் கற்களாலும் வர்ணக் கண்ணாடிகளாலும் அலங்கரிக்கப்பட்டு அழகோடு விளங்குகின்றன கோயில்கள் இரண்டும்.

உதயபுரியிலிருந்து பன்னிரண்டு மைல் சென்றால் ஏகலிங்கநாதர் கோயில் வந்து சேருவோம். இந்த ஏகலிங்கநாதர்தான் மகாராணாக்களின் வழிபடு தெய்வம். பல தடவை முகம்மதியப் படையெடுப்புக்கு உட்பட்டிருக்கிறது; இடிக்கப்பட்டிருக்கிறது. கடைசியாக மகாராணா பாப்பாராவல் என்பவர் கட்டி முடித்திருக்கிறார். கோயிலில் சதுர்முக சிவன் மிக்க அழகாகக் கருத்த சலவைக் கல்லில் உருவாகி யிருக்கிறார். நாள் முழுவதும் பூசை நடந்து கொண்டே இருக்கிறதென்றாலும் மாலை ஏழு மணிக்கு நடைபெறும் ஆரத்திக்கே பக்தர்கள் பலர் வருகின்றனர். இரண்டு மாடியாகக் கோயில் அமைந்திருக்கிறது. அதில் கருவறைக்கு மேலே சிகரம்' ஓங்கி உயர்ந்திருக்கிறது. ஏகலிங்கரையும் வணங்கிய திருப்தியுடனே திரும்பலாம்.

இதே வழியைத் தொடர்ந்து வடக்கு நோக்கி இன்னும் பதினெட்டு மைல் போனால் நாதத் துவாரம் என்னும் இடத்துக்கு வந்து சேரலாம். இங்கு செல்வதற்கு ரயில் வசதி, பஸ் வசதி எல்லாம் உண்டு. இது ஒரு சிறந்த வைஷ்ணவத் தலம். இங்கு கோயில் கொண்டிருப்பவர் ஸ்ரீநாதர். இவர் கரிய வடிவினர். இருந்த கோலத்தில் காட்சி அளிக்கிறார். இவர் பிருந்தாவனத்திலிருந்து வந்த கோவர்த்தனதாரி. அந்தக் கோவர்த்தனதாரியைப் பிருந்தாவனத்திலிருந்து ஸ்ரீவல்லபாச்சாரியார் மேவாருக்குக் கொண்டு வந்திருக்கிறார். வருகிற வழியில் சின்ஹாத் என்ற பழைய ஊரில் கோவர்த்தனன் வந்த வண்டி நின்றுவிட்டது. ஆதலால் அங்கேயே கோவர்த்தனனை ஸ்ரீநாதர் என்ற பெயரில் வல்லபாச்சாரியார் பிரதிஷ்டை செய்திருக்கிறார். அந்த இடமே நாதத் துவாரம். நாதத் துவாரம் என்றால் ஸ்ரீநாதர் கோயில் செல்லும் வாயில் என்றுதான் அர்த்தம். இங்கு ஸ்ரீவல்லபாச்சாரியார் பூஜை முறைகளை ஒழுங்கு செய்திருக்கிறார். அவருடைய சந்ததியார் இன்று கோயிலில் ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருக்கின்றனர். கோயிலிலே பிருந்தாவனத்துக் கோவர்த்தனனை ஸ்ரீவல்லபர் நாதத் துவாரத்தில் பிரதிஷ்டை செய்யும் சித்திரம் அழகாகத் தீட்டப் பட்டிருக்கிறது.

இன்னும் காலமும் வசதியும் உள்ளவர்கள் இங்கிருந்து காங்ரோலி செல்லலாம். அங்கிருந்து. சதுர்புஜர், ரிஷபதேவர் முதலியவர்களை வணங்கித் திரும்பலாம். திரும்பும் போது உதயபுரிக்குத் திரும்பவும் எப்போது வர முடிகிறதோ என்று ஏங்கிய வண்ணமே திரும்புவோம். அத்தனை அழகிய நகரம் அது. 'ரமணீயம்' என்ற வார்த்தையின் பொருள் அறிய ஒரு நடையே போகலாம் அங்கே.

டாக்டர் ஜகந்நாதன் 'ஸெல்ப் டினைய'லுக்கு விளக்கம் கேட்டதினால் வசந்தி திகைத்துத் திணறிப் போய்விடவில்லை. ''பேஷாகச் சொல்கிறேன். ஸெல்ப் டினையல் என்பது தன்னை மேன்மைப்படுத்திக் கொள்ளாமல் தன்னையே புறக்கணித்துக் கொள்ளும் ஒருவித தன் மறுப்பு மனோபாவம்'' என்றாள்.

''கரெக்ட்! எனக்கு 'செல்ப் டினையல் உண்டு. அதே சமயம் எனக்கு 'ஸெல்ப்–கான்பிடன்ஸ்' என்கிற தன்னம்பிக்கையும் உண்டு. இவை யிரண்டும் கதாசிரியனுக்கு மட்டுமல்ல! அரசியல் தலைவனுக்குக்கூட முக்கியம்!'' என்று தன்னையே ஒரு பொது விமரிசனத்துக்கு உரைகல்லாக்கிக் கொண்ட ஜகந்நாதன் ரசமான ஒரு சிரிப்புடன் வசந்தியின் அழகான முகத்தை உற்றுப் பார்த்துக் கொண்டே, ''வசந்தி! என்னைப் பற்றி நீ எந்த அபிப்பிராயம் உருவாக்கி வைத்திருக்கிறாய் ?'' என்று கேட்டார்.

''உங்களுக்கு என்ன ஸார்? நீங்கள் உலகம் சுற்றிய டாக்டர்! பழமை புதுமை இரண்டையும்ம நையாண்டி செய்யக் கூடிய அறிவுலக மேதை!''

''வசந்தி! நான் ஒரு நாவலாசிரியன் என்பதையும் மறந்து விடாதே!''

''சார்! உங்களை மறந்தாலும் உங்களுடைய நாவல்களை மட்டும் ஒரு போதும் மறக்க மாட்டேன்!'' என்று கிண்டலாகச் சிரித்த வசந்தி, ''ஸார்! ஏனென்றால், உங்களுடைய நாவல்களில் பெண்களை எவ்வளவு மோசமாகப் பரிகாசப் பொருள்களாக்கி யிருக்கிறீர்கள் தெரியுமா ?'' என்றாள்.

''வாழ்த்துக்களைவிட வசவுகள்தான் அதிசீக்கிரமாக வாசகர்களைக் கவர்ந்திழுக்கும்! இது 'ஜெர்னலிஸத்தின்' ரகசியம்!'' என்று கூறிய ஜகந்நாதன், ''அிருக்கட்டும் வசந்தி! பெண்களைப் பற்றி நான் பரிகாசமாக எழுதியதற்கு



நீ எனக்குச் சரியான சூடு கொடுக்க வேண்டும் என்று துடித்தாய் இல்லையா?'' என்று கேட்டார்.

அதற்கு வசந்தி பதில் சொல்லாமல் தலையைக் குனிந்து கொண்டு ஓர விழிகளை மட்டும் கொஞ்சம் உயர்த்தி ஜகந்நாதனைப் பார்த்து விட்டு அழகாக மௌனம் சாதித்தாள்.

அவளுடைய பசுமையான முகத்தில் அதிகமாகப் பூசியிருக்கும் பௌடரின் கம கம வென்ற வாசனை அவளிடமிருந்து மெல்ல எழுந்து சுற்றிலும் பரவும் ஒருவித இயற்கை மணத்துக்கு இணை சேர்ப்பது போல் மெல்லிய செண்ட் வாசனை, உடம்பில் எடுப்பாக அணிந்திருக்கும் புத்தாடைகளின் சல சலப்பு, பருவத்தின் பொலிவுக்குப் பின்னணி போன்ற நகைகளின் மினு மினுப்பு, குறுகுறு வென்ற கருவிழிகளுக்குக் காதோரம் வரை தீட்டிய மைப் பூச்சு, நெற்றியில் ஜிகினுப் பொட்டு, இன்னும் பல விசேஷ அலங்காரங்களுடன் வசந்தி ஒரு கவர்ச்சிகரமான கோணத்தில் நெளியும் போது ஆளை அப்படியே சுருட்டி இழுத்துவிடும் போல் இருந்தது.

ஜகந்நாதன் தன் கண்களில் சிரிப்பின் ஒளி மின்ன அவளை உற்சாகமாகப் பார்த்துக் கொண்டே, ''வசந்தி! நான் யார் என்பது தெரியாமலே என்னோடு நீ என் காரில் இங்கே வரும் போது 'ஜகந்நாதன் மிகப் பெரிய அறிவாளி என்றலும் அவருடைய அறிவை யெல்லாம் கலங்கடிப்பேன், அவரை அழ அழ வைப்பேன், அதற்கு ஒரு திட்டமும் வைத்திருக்கிறேன்' என்று சொன்னுயே?.... அது என்ன திட்டம்? உன் மீது எனக்குக் காதலை உண்டாக்கி, பிறகு நீ கண்ணும்பூச்சி விளையாடி, கடைசியில் என்னை அழ அழ வைப்பதுதானே?'' என்று கேட்டார்.

வசந்திக்குத் தூக்கி வாரிப் போட்டது. முகம் குப்பென்று வியர்த்தது. உடம்பெல்லாம் வெட வெட வென்று ஆடியது.

அவள் தலை மீது ஜகந்நாதன் ஏதோ பிரும்மாஸ்திரத்தைத் தூக்கிப் போட்டது போல் அவள் பிரமித்துப் போய்ச் சுய நினைவிழந்து ஒரு கணம் அப்படியே செயலற்று நின்று விட்டாள். பிறகு அவள் எப்படியோ தன்னைச் சமாளித்துக் கொண்டு முகத்தில் ஒரு ரோஷத்தையும் வரவழைத்துக் கொண்டு, ''நீங்கள் எதற்காக என்னைக் காதலிக்க வேண்டும்? அதற்காகத்தான் நான் இங்கே வந்தேனு?'' என்று படபடத்தாள்.

''பின்னே, உன் விசேஷ அலங்காரங்களெல்லாம் யாருக்கு? எனக்காகத்தானே? அதனுல்தான் அந்த அலங்காரக் கலை யெல்லாம் மழையில் வீணுகி விடக் கூடாதே என்று என் காரிலேயே உன்னை அழைத்து வந்தேன்'' என்று அமைதியாகச் சொன்ன ஜகந்நாதன், ''ம்! இந்தப் பெண்கள் வெறும் முகப் பவுடர், வாசனைத் தைலம், கண் மைப் பூச்சு, நெளிவதிலே கவர்ச்சிகரமான போஸ், கொஞ்சம் சிரிப்பு, ஓர விழிப் பார்வை இவற்றை வைத்துக் கொண்டு எவ்வளவு பெரிய அறிவாளியையும்

**அரு. ராமநாதன்**



எவ்வளவு சுலபமாக வலை வீசிப் பிடித்து முட்டாளாக்கி விடப் பார்க்கிறார்கள்! அதுதான் பெரிய வேடிக்கை'' என்று வெகு அழகாகச் சொல்லி முடித்தார்.

வசந்தி ஏதோ நெருப்பை மிதித்தவள் போல் துள்ளிக் குதித்து 'விர்' என்று அந்தப் புத்தக அறையை விட்டு வெளியே ஓடி விட்டாள்...

## அத்தியாயம் இருபத்தைந்து

# சங்கீத சிகித்சை

டாக்டர் ஜகந்நாதன் தம் நர்ஸிங் ஹோமில் சுற்றுலா புறப்படுவதற்காகப் புத்தக அறையை விட்டு வெளியே ஓரடி எடுத்து வைத்தார்.

அப்போது எங்கிருந்தோ வந்த பிச்சுமணி முகத்தைச் சுளித்துக் கொண்டே வேகமாக அவரைத் தாண்டிச் செல்ல முயன்றான்.

''என்ன, பிச்சுமணி? நீ எங்கே வந்தாய்?'' என்று குறுக்கே பாய்ந்து நின்ற ஜகந்நாதன், ''ஏதாவது ஆக்ஸிடெண்டா (விபத்தா)? உனக்கு ஏதாவது 'டிஞ்சர்' போட வேண்டுமா? அல்லது உன் காருக்குப் 'பஞ்சர்' ஒட்ட வேண்டுமா?'' என்று கிண்டலாகக் கூறிச் சிரித்தார்.

''இல்லை. நான் சும்மாத்தான் வந்தேன்.....''

''சும்மா எதுக்காக என் ஆஸ்பத்திரிக்கு வருகிறாய்? வாத்தியாரம்மாவைப் பார்க்கத்தானே?''

''ஆமாம்; நான் மிஸ். உமாவைப் பார்க்கத்தான் இங்கு வந்தேன்!''

''ஆப்பிள் ஆரஞ்சுப் பழம் ஏதாவது உதன் கணக்கில் வாங்கிக் கொண்டு வந்திருக்கிறாயா?''

''இல்லை!''

''நோயாளியைப் பார்க்க வருகிற விருந்தாளி வெறுங் கையோடு வரலாமோ...?''

பிச்சுமணி தலை குனிந்தான். இந்த விஷயம் அவனுக்கு முன்பே தெரிந்திருந்தால் அவன் ஒரு பழக் கடையையே வாங்கித் தன் கார் நிறைய நிரப்பிக் கொண்டு வந்திருப்பான்.

''பரவாயில்லை, பிச்சுமணி!'' என்று ஆறுதல் கூறிய ஜகந்நாதன் தம் சட்டைப் பையிலிருந்து மல்லிகைப் பூப் பொட்டலத்தை எடுத்துப் பிச்சுமணியின் கையில் வைத்து அழுத்தி, ''இந்தப் பூவை நான் மிஸ். உமாவுக்காகத்தான் வாங்கினேன்! இதை நீயே கொண்டு போய் உன் கையாலேயே உன் 'பிரசண்டாக'க் கொடு!'' என்று விஷமமாகச் சிரித்தார்.

பிச்சுமணி நெருப்பைத் தொட்டவன் மாதிரி துடிதுடித்தான். ஆத்திரம் பற்றிக் கொண்டு எரிந்தது. அந்தப் பூப் பொட்டலத்தை அப்படியே தன் கையில் வைத்துக் கசக்கிச் சுக்குநூறாகப் பிய்த்தெறிந்து விடலாமா என்று குமுறினான். ஆனால் உமாவிடம் ஜகந்நாதன் இதைப் பற்றி ஏதாவது திரித்துச் சொல்லிக் கோள் மூட்டி விட்டால் உமா பெரிதும் வருந்துவாளே என்று நினைத்துப் பிச்சுமணி தன் ஆத்திரத்தை யெல்லாம் அடக்கிக் கொண்டு வேறு வழியின்றி அந்தப் பூப் பொட்டலத்தை வாங்கி ஏதோ தீப்பொறிகளைத் தன் கையில் பிடித்துச் செல்பவன் போல் அதைத் தூக்கிக்கொண்டு மிஸ் உமா தனியாகப் படுத்திருக்கும் அறைக்குள் நுழைந்தான்.

அங்கே கட்டிலில் படுத்திருந்த உமா அவனுடைய காலடி ஓசை கேட்டதும் நிமிர்ந்து பார்த்து விட்டு, தன்னை மறந்த முக மலர்ச்சியுடன், ''பிச்சுமணியா?'' என்று ஆவலோடு மெல்லிய குரலில் கூவினாள்.

பிச்சுமணி தன் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டே மெல்ல உமாவின் கட்டிலருகே வந்து நின்று தன் கையிலுள்ள மல்லிகைப் பூப் பொட்டலத்தை உமாவின் முன் நீட்டினான்.

''பூவா? எனக்கா?.... நீயா?'' என்று உமா அளவு கடந்த வியப்போடு பிச்சுமணியைக் கூர்ந்து பார்த்தாள்.

''நான் வாங்கி வரவில்லை!'' என்று பிச்சுமணி தடுமாறும் குரலில் மெளனமாக முனகினான்.

''வசந்தி பூ வாங்கி வந்து என் தலை நிறையச் சூட்டி விட்டுப் போயிருக்கிறானே! இந்தப் பூ வேறு எதுக்கு?'' என்றாள் உமா.

''இந்தப் பூவை ஜகந்நாதன்தான் வாங்கினாராம்! இதை உங்களிடம் கொண்டு போய்க் கொடுக்கும்படி அவர்தான் சொன்னார்!'' என்று ஆத்திரத்துடன் குமுறிய பிச்சுமணி அந்தப் பூப் பொட்டலத்தை வேண்டாவெறுப்போடு உமாவின் அருகில் மருந்து மேஜையின்மீது 'டக்'கென்று வைத்தான்.

உமாவுக்கு ஒன்றும் புரியவில்லை. குழம்பியபடி ஏதோ யோசனையில் ஆழ்ந்தாள்.

# போர்ஹான்ஸ் பற்பசையின் மூலம் ஈறு உபாதைகள் பற்சிதைவு போன்ற கோளாறுகளிலிருந்து வியக்கத்தக்க பலன்கள் கிடைக்கும்



தாமாகவே விரும்பி எழுதப்பட்ட கடிதங்கள் *
இவற்றை நிரூபிக்கின்றன.

* இத் நற்சாட்சிக் கடிதங்களை ஜாப்ரே மானேர்ஸ் & கோ. லிட்., கம்பெனியாரின் எந்த ஆபீஸிலும் காணலாம்.

எனக்கு விபரம் தெரிந்த காலிலிருந்தே போர்ஹான்ஸ் பற்பசையை உபயோகித்து வருகிறேன். உண்மையாகவே, இதன் நற்பலனே. மன்னிக்கவும், இதன் மிகச் சிறந்த தாக்கத்தைப் பற்றி இதைத் தவறாமல் உபயோகித்து வந்த என் பெற்றோர்களிடமிருந்து அறிந்து கொண்டேன். என்னுடைய பற்களின் ஒளியைக் காண்பிப்பதற்குப் பெருமைப்படுகிறேன். ஏனெனில், கிரமமாகவும், வழக்கமாகவும், தொடர்ந்தும் போர்ஹான்ஸ் உபயோகிப்பதால்தான் அவை அவ்வாறிருக்கின்றன என்று நிச்சயமாகக் கூறுவேன்.

ஜே. எம். கல்கத்தா.

உங்களுடைய போர்ஹான்ஸ் பற்பசையை உபயோகித்ததால் எனக்கிருந்த கடுமையான ஈறு உபாதையிலிருந்து ஏற்பட்ட குணத்தைப்பற்றி உங்களுக்குத் தெரிவிப்பதை என் கடமையெனக் கருதுகிறேன். இப்பொழுது நான் தங்களுடைய போர்ஹான்ஸைத் தவறாமல் உபயோகித்து வருகிறேன். ஈறுகளில் வேதனை, வீக்கமடைந்த ஈறுப் புண்கள், வாய்நாற்றம் முதலியவைகளிலிருந்து முன்பு மிகவும் அவதிப்பட்டது போலில்லாமல் நல்ல குணமாகியிருக்கிறேன். ஆண்டவன் போர்ஹான்ஸை என்றும் ஆசீர்வதிப்பாராக எனக் கூற விரும்புகிறேன்.

ஹெச். ஆர். எஸ். பம்பாய்.

பலவகையான பற்பசைகளை உபயோகித்த பின்னர் எனது 50-வது வயதில் போர்ஹான்ஸ் பற்பசையை உபயோகிக்கத் தொடங்கினேன். கடந்த 20 வருடங்களுக்கு மேலாக அதை உபயோகித்து நல்ல பலனடைந்துள்ளேன். வேலே, என் 72-வது வயதில் ஒரு என்னுடைய பற்கள் இயற்கையானபடி வலுவாகவும், சீராகவும் இருப்பதற்குக் காரணம் போர்ஹான்ஸின் மாய வித்தையாகவும் இருக்கலாம்.

ஜீ. என். மதுரை.

## போர்ஹான்ஸ்

ஒரு பல் வைத்தியரால் உருவாக்கப்பட்ட பற்பசை.




இதற்கு உகந்த, சிறந்த சேர்க்கைக்கு,

**போர்ஹான்ஸ்**
**டபிள் ஆக்ஷன்**
டூத்பிரஷ்
உபயோகியுங்கள்.




T-33 A. TAM...

''மிஸ், உமா! உங்களுக்குக் குண்டு மல்லிகை என்றால் ரொம்பப் பிடிக்கும், இல்லையா?'' என்று பிச்சுமணி அழாத குரலில் கேட்டான்.

''ஆமாம்!'' என்ற உமா ஏதோ யோசித்து விட்டு, ''பிச்சுமணி! அந்தப் பூவை எடு!'' என்று புன்முறுவலுடன் சொன்னாள்.

அந்தப் பூவை எடுத்துத் தரச் சொல்லி உமா தன் கூந்தலில் சூட்டிக் கொள்ளப் போகிறாளோ என்று பிச்சுமணி நினைத்தான். உடனே கோபத்தால் அவன் முகம் குப்பென்று சிவந்து, அடுத்த கணம் அழுகை வந்து விடும் போலிருந்தது.

அதே கணம், ''அக்கா! அக்கா!'' என்று கூவிக் கொண்டே அறைக்குள் பாய்ந்து வந்த வசந்தி, அங்கு ஒருபுறம் பிச்சுமணி தன் கையில் பூப் பொட்டலத்துடன் நிற்பதைப் பார்த்ததும், — ''அடேடே! பிச்சு! நீ வேறே என் அக்காவுக்குப் பூ வாங்கி வந்திருக்கிறாயா? சரிதான் போ! பூ பாரம் தாங்காமல் அக்காவுக்குத் தலை வலி வந்து விடும்!'' என்று கேலி செய்து கலகலவென்று சிரித்தாள்.

''பிச்சுமணி! அந்தப் பூவை வசந்தியிடம் கொடு!'' என்றாள் உமா.

''நோ! நோ! எனக்கு எதுக்கு அக்கா பூ? அதுவும் பிச்சுமணி எதுக்காக எனக்குக் கொடுக்கிறது?'' என்று வசந்தி துள்ளினாள்.

''அசடு! அந்தப் பூவை வாங்கிக் கொண்டு போய்க் சுவர் மாடத்திலுள்ள சின்னப் பிள்ளையாருக்குச் சாத்து!!'' என்றாள் உமா.

பிச்சுமணியின் முகம் ஆனந்தத்தால் மலர்ந்தது. ஏதோ ஒரு போட்டிக்காரனைத் தற்போதைக்கு விரட்டி விட்டதைப் போன்ற ஒரு வெற்றிக் களிப்பு உண்டாயிற்று.

''பிச்சுமணி! உன் தாத்தாவை நான் மறுபடி பார்த்தேன்! அது உனக்குத் தெரியுமோ?'' என்று வசந்தி மெல்ல ஆரம்பித்தாள்.

''என் தாத்தாவை நீ மறுபடியும் பார்த்தாயா?'' என்று பிச்சுமணி திகிலுடன் கேட்டான்.

''ஆமாம்! உன் தாத்தா ஒரு 'பெண் வெறுப்பாளர்' அல்லவா? அவரைப் பேட்டி காண உங்கள் பழைய அரண்மனைக்குப் போனேன்! அப்போது நீ வீட்டில் இல்லை. உன் தாத்தா மட்டும் தோட்டத்தில் முன் போலவே ஆட்டுக் குட்டியை விரட்டிக் கொண்டிருந்தார். அவரிடம் நான் 'தாத்தா! தாத்தா!' என்று எவ்வளவோ அன்பொழுகக் குழைந்து பேசி, 'வருங்காலம் பெண்கள் யுகம்! அதை மறந்து விடாதீர்கள், தாத்தா!' என்று புத்திமதி சொன்னேன். உங்கள் அரண்மனையில் பூட்டிக் கிடக்கிற 'ராணி மஹாலை'த் திறந்து அதில் பெண்கள் மகாநாடு கூட்ட வேண்டும் என்ற ஆலோசனையும் வழங்

## ஆட்சி மொழி வழக்கு

திரு அண்ணாதுரை அவர்கள் ஆறுமாதச் சிறைத் தண்டனை பெற்றிருக்கிறார்.

திரு அண்ணாதுரை எத்தனையோ முறை சிறை சென்றவர்தான் என்றாலும், இம்முறை அவர் சிறை சென்றிருப்பதில் தனி விசேஷம் உண்டு. கட்சிக்கு அப்பாற்பட்ட தென்னகமக்கள் ஏன், ஹிந்தி பேசாத மக்கள் அனைவரின் உள்ளக் குமுறலை வெளியிடும் பிரதிநிதியாக அவர் சென்றிருக்கிறார். ஆகவே அவர் வழக்கு இன்று பாரத நாடெங்கும் கூர்ந்து கவனிக்கப்பட்ட வழக்காகிவிட்டது.

அவர் நீதி மன்றத்தில் அளித்த வாக்கு மூலமும், மிக உயர்தரமான நடையில் கட்சி உணர்ச்சிக்கு அப்பாற்பட்டு நின்று ஒலித்தது.

தென்னக மக்கள் இரண்டாந்தர குடிகளாக்கப்படுகிறார்கள் என்பதையும், பாரத நாட்டின் கௌரவத்தில் அக்கறையுள்ளவர்களே தங்கள் எண்ணத்துக்கு ஊறு விளைவிக்கிறார்கள் என்பதையும் தெளிவாக்கினார்.

வழக்கை விசாரித்த நீதிபதி, நோக்கம் எதுவாயினும் சட்டம் காரியத்தையே கவனிக்கும் என்று கூறி ஆறு மாதச் சிறைத் தண்டனை விதித்திருக்கிறார்.

இவ்வழக்கு நீதி மன்றத்திலிருக்கும் போது, சென்னைக்கு வந்த பிரதமர் நேரு இவ்வியக்கத்தைப் பற்றிக் கண்டித்துப் பேசியது, இயக்கத்துக்குப் புது ஊக்கத்தை ஊட்டியிருக்கிறது.



கினேன். உன் தாத்தா பெரிதாகச் சத்தம் போட்டார். அவர் ஒரு பெண்ணின் காலில் விழுந்து கெஞ்சினால்தான் புத்தி வரும். அப்போதுதான் எனக்கும் திருப்தியாக இருக்கும். இதை அவரிடமே நான் சொல்லி விட்டு வந்தேன்!.... எனக்கென்ன பயமாம்?'' என்றாள் வசந்தி வெகு உற்சாகமாக.

''ஏண்டி, வசந்தி! பாவம், அந்தப் பெரியவரிடம் அப்படியெல்லாம் சொல்லி விட்டு வரலாமா?'' என்று உமா தன் தங்கையைக் கடிந்து விட்டு, ''அவர் எதுக்கடி ஒரு பெண்ணின் காலில் விழுந்து கெஞ்சப் போகிறார்? புத்தியைப் பார்!'' என்றாள்.

''அக்கா! உதாரணமாக நம் பிச்சுமணி யாராவது ஒரு பெண்ணை ரொம்ப டியரஸ்டாக, 'லவ்' பண்ணுகிறான் (காதலிக்கிறான்) என்று வைத்துக்கொள்வோம்! அந்தப் பெண் அவனுடைய தாத்தா தன் காலில் விழுந்து கெஞ்சினால்தான் அவனுடைய காதலை ஏற்றுக் கொள்ள முடியும் என்று சொன்னால் பிச்சுமணி தவித்துத் தன் தாத்தாவிடம் போய் 'ஓ'வென்று அழுது தற்கொலை செய்து கொள்ளப் போவதாகப் பயமுறுத்துவான்! உடனே தாத்தா பயந்து போய்த் தம் பேரனுக்காக அந்தப் பெண்ணின் காலில் போய் விழுந்து கெஞ்சுவார்! அப்போது பார்க்க வேண்டுமே, அவருடைய முகத்தை!'' என்று கூறிய வசந்தி கற்பனையில் அதைப் பார்த்து விட்டுக் கலகல வென்று சிரித்தாள். பிறகு ஏதோ யோசித்து விட்டு, ''ஆனால் நம் பிச்சுமணிக்கு 'லவ்' பண்ணத் தெரியுமோ? அவன் சுத்த வெகுளிப் பையன் ஆயிற்றே!'' என்று கூறினாள் மெல்ல.

''அசடு! அசடு!'' என்று முணுமுணுத்த உமா, தன் தங்கையைக் கண்டிக்கும் தோரணையில் உற்றுப் பார்த்தாள்.

அப்போது பிச்சும்ணியின் முகத்தில் தான் உண்மையில் அசடு வழிந்தது!

தன்னை இவ்வளவு மட்டமாக 'அசட்டுப் பிச்சு' என்றே இன்னும் வசந்தி நினைத்துக் கொண்டிருக்கிறாளே என்று அவன் எண்ணும் போது, அவள் அக்கா உமாவின் மீது தனக்குள்ள காதலை யெல்லாம் எடுத்துச் சொல்லி அடை மழை போல் பொழிந்து தள்ள வேண்டுமென்று அவன் உதடுகள் துடிதுடித்தன. ஆனால் ஒரு வார்த்தை கூட அவன் வாயிலிருந்து வெளிவராமல் நெஞ்சுக் குறுத்துக்குள்ளே அடங்கியது.

இவ்வாறு மூவரும் பேசிக் கொண்டிருக்கும்போது உமாவிடம் 'டியூஷன்' சொல்லிக் கொள்ளும் குழந்தைகள் தங்கள் டீச்சரம்மாவைப் பார்ப்பதற்காக ஆவலோடு வந்து அவளுடைய கட்டிலைச் சூழ்ந்து கொண்டார்கள். அக்குழந்தைகளின் பால் வடியும் முகங்களையும், பரிவு ததும்பும் வார்த்தைகளையும் கண்டதும் உமா பழைய உற்சாகம் முழுவதையும் அடைந்தாள். ஆனால் கட்டிலிலிருந்து புரண்டு எழுந்திருக்கவோ, தன் கால் கட்டைச் சிறிதும் அசைக்கவோ அவளால் முடியவில்லை. அவள் பெருமூச்சு விட்டாள்.

சிறுமி ராஜி தன்னுடன் வீணையையும் எடுத்து வரச் செய்து உமாவிடம், ''டீச்சரக்கா! வீணை வாசித்தால் உங்களுக்குத் தெம்பாக இருக்குமென்று சித்தப்பா சொன்னார்!'' என்றாள் கனிவுடன்.

''ஓ! டாக்டர் ஜகந்நாதன் வெறும் சங்கீதத்தையே 'டானிக்'காக உபயோகப்படுத்தச் சொல்கிறாரோ?'' என்று கிண்டலாகச் சிரித்த வசந்தி, ''அக்கா! அவர் மகா மேதையல்லவா? 'மியூஸிக்—க்யூர்' (சங்கீத சிகிச்சை) என்பதைப் பற்றி ஏதாவது புஸ்தகத்தில் படித்திருப்பார். உடனே அதை உன் விஷயத்தில் பரீட்சித்துப் பார்க்க முயலுகிறார்போல் இருக்கிறது!'' என்றாள்.

''டீச்சரக்கா! வீணை வாசித்தால் நான் டான்ஸ் ஆடுகிறேன்!'' என்றாள் சிறுமி ஆவலோடு.

''என்னால் எழுந்து உட்கார்ந்து வீணை வாசிக்க முடியாதே, குழந்தே!'' என்ற உமாவின் குரல் தழுதழுத்தது.

வீணையையே குறுகுறுவென்று பார்த்துக் கொண்டிருந்த பிச்சுமணி, ''நான் வீணை வாசிக்கட்டுமா?'' என்று ஆர்வத்தோடு கேட்டான்.

''என்ன, பிச்சுமணி! உனக்கு வீணை வாசிக்கத் தெரியுமா?'' என்று உமா அளவுகடந்த வியப்போடு கேட்டாள்.

வசந்தியும் அதே வியப்புடன், ''அடேடே! வீணை என்பது சரஸ்வதியை நினைவூட்டும் பெண்களின் கைக்கருவியல்லவா? உன் தாத்தா வீணையைக் கண்டாலே உடைத்தெறிந்திருப்பாரே!'' என்று கேட்டாள்.

''என் தாத்தாவோடு சண்டைபோட்டு வீணை வாசிக்கக் கற்றுக்கொண்டேன்!'' என்றான் பிச்சுமணி.

வசந்தி இன்னும் வியப்பு நீங்காதவளாக, ''நீயோ துப்பாக்கி தூக்குகிற மேஜர் வீட்டுப் பையன்! ஓட்டைக் காரில் உல்லாசமாக ஊர் சுற்றிக் கொண்டு திரிகிறவன்! உனக்கெப்படி வீணைப் பைத்தியம் பிடித்தது?'' என்று கேட்டாள்.

(தொடரும்)

# எக்கோணத்திலும் சரி



## இதோ உங்களுக்குக்
# கூடுதலான பாதுகாப்பு
## அளிக்கக்கூடிய டயர்

இந்த டிரெட் அமைப்பு, மோட்டாரோட்டிகளுக்கு மிகவும் அதிகமான பாதுகாப்பளிப்பதற்கெனப் பல வருடங்களாக சோதனைத்தளங்களிலும் ஓட்டப் பந்தயப் பாதைகளிலும் ஆராய்ந்து சோதிக்கப் பட்டதாகும். ஆயிரக்கணக்கான கோணங்கள் ரஸ்தாவைக் கவ்விப் பிடிப்பதால், சுலபமாக வண்டியை ஓட்டுவதற்கு உதவுவதுடன் நீங்கள் ஓட்டத் தொடங்கும்போதும் நிறுத்தும்போதும் இவை சிறந்த இழுப்புத் தன்மையை அளிக்கின்றன. பயர்ஸ்டோனை வாங்கும்போது நீங்கள் எதைப் பெறுகிறீர்கள் என்பது உங்களுக்குத் தெரியும்.

# Firestone

## பயர்ஸ்டோன்

நியூ டிலக்ஸ் சாம்பியன் டயர்

**பயர்ஸ்டோன்** தரத்துக்கும் உழைப்புக்கும் உங்கள் சின்னம்

# கொன்றது யார்?

ரா.கி.

மர்மக்கதை

ராமச்சந்திரன் அப்பொழுது தத்துவ ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்தான். எனவே, வாய்ப்புக் கிடைக்கும் பொழுதெல்லாம் தத்துவத்தைப் பற்றியே பேசத் தொடங்கி விடுவான்.

அன்றுகூட அப்படித்தான். தன் வீட்டில் நண்பர்களுக்கு ஒரு பெரும் விருந்து அளித்தபின் தனக்குப் பிடித்தமான தத்துவ மூட்டையை அவிழ்த்து விடத் தொடங்கி விட்டான். ராமச்சந்திரன் பத்து நிமிடங்கள் கூடப் பேசி யிருக்க மாட்டான். நண்பர்கள் அலுத்துச் சலித்து விட்டனர். ஆனால் அவன் வீட்டு விருந்தைச் சாப்பிட்டிருந்ததனால் அலுப்பைக் காட்டிக் கொள்ள முடியாமல் திண்டாடினர்.

''நான் சொல்வதன் கருத்து என்னவென்றால்...'' என்று தொடங்கினான் ராமச்சந்திரன்.

அவன் பேச்சு முடிவை எட்டி விட்டதாக எண்ணிய நண்பர்களுக்கு ஏமாற்றமே எஞ்சியது. இன்னும் ஒரே வார்த்தை என்று சொல்லி ஒரு மணிநேரம் பேசியும் முடிக்காத பிரசங்கியைப்போல் அவன் தொடர்ந்து பேசலுற்றான்.

அவன் பேச்சு 'படு போரா'கத் தோன்றவே, ''இந்த வறட்டு வேதாந்தத்திலேயே இப்படி மனத்தைப் பறி கொடுக்கும் நீங்கள் மர்மக் கதை ஒன்றைக் கேட்டால் என்ன செய்வீர்களோ? —முராரி லாலைக் கொன்றது யார், தெரியுமா?'' என்று திடீரென்று ஒரு கேள்வியைத் தூக்கிப்போட்டு நண்பர் குழாத்தின் கவனம் முழுவதையும் கவர்ந்தான் சேகரன். போலீஸ் இலாகாவில் குற்றப்பகுதி இன்ஸ்பெக்டராக வேலை பார்த்து வந்தான் அவன். எல்லோரும் அவன் பேச்சைக் கேட்கக் காதைத் தீட்டிக் கொண்டு உட்கார்ந்தனர். ராமச்சந்திரன்மட்டும் முகத்தைத் தூக்கி வைத்துக்கொண்டு உட்கார்ந்தான்.

''முராரிலாலின் மரணத்தைப் பற்றிப் பெரும் சிக்கலான காரியம் ஒன்றும் நிகழவில்லை. அதைக் கண்டு பிடிப்பதுகூட அவ்வளவு சிரமமில்லை. எனவே, சிக்கல் சீக்கிரமே தீர்ந்துவிட்டது!'' என்றான்.

''அப்படித்தான் இருக்கும். அது என்ன தத்துவ சாஸ்திரமா?'' என்று கேலியாகக் கேட்டு ராமச்சந்திரன், ''அதனால்தான் நண்பர் சேகரைப் போன்றவர்களே கூடச் சுலபமாகச் சிக்கலை விடுவித்திருப்பார்கள்!'' என்றான்.

''இல்லை, நண்பா!'' சேகரன் உறுதியாகத் தலையசைத்து இளநகையுடன் ராமச்சந்திரனைப் பார்த்தவண்ணம், ''இந்தப் புதிரை விடுவித்தவர் வேறு ஒரு இன்ஸ்பெக்டர். தேஷ்பாண்டே என்பவர். இவ்வழக்கில் நானும் அவருக்கு உதவியாகப் பணியாற்றினேன். அப்பொழுது அவர் எனக்கு அந்தக் கதையைக் கூறினார். நான் அவர் எனக்கு எப்படிச் சொன்னாரோ, அப்படியே உங்களுக்கும் சொல்கிறேன். ஒரு விஷயத்தையும் உங்களுக்கு முதலில் நினைவூட்டி விடுகிறேன். இந்த வழக்கில் நடந்த நிகழ்ச்சியைக் காட்டிலும் சொல்லும் முறைதான் விசேஷமானது. நடந்தது இதுதான்:

''சாகும் போது முராரிலாலுக்குக் கிட்டத்தட்ட நாற்பத்தைந்து வயது இருக்கும். அவர் சிறிது ஆணவம் பிடித்த மனிதர். தமது கறுப்பான தலை மயிரை எப்பொழுதும் படிய வாரி விட்டுக் கொண்டிருப்பார். அவர் சுக புருஷர். எப்பொழுதும் பகட்டாக உடை உடுத்தி யிருப்பார். அவருடைய தோற்றமும் பார்வைக்கு அவ்வளவு அழகானதல்ல. ஆயினும் ஒரு முக்கியமான விஷயம் என்னவென்றால், எப்படியோ அவர் இணையற்ற அழகி ஒருத்தியை மணம் புரிந்து கொண்டிருந்தார். இதைப் பற்றி நீங்கள் ஒன்றும் கேள்வி கேட்க வேண்டிய தேவையிராது. ஆனால் ஒரு விஷயம் மட்டும் நினைவு வைத்துக் கொண்டால் போதுமானது. இந்தத் திருமணத்தினால் அவர் மனைவிக்கு அவ்வளவாகத் திருப்தி கிடையாது. அவள் இஷ்டத்துக்கு மாறாகவே இந்தக் கல்யாணம் நடைபெற்றிருந்தது.

கணவனுடன் மூன்று ஆண்டுகள் வாழ்ந்தபின் அவள் அதிருப்தி எல்லை மீறிவிட்டது. தன் வேட்கையைத் தீர்த்துக் கொள்ளும் உத்வேகத்துடனோ என்னவோ, தனது கணவனிடம் மோட்டார் டிரைவராக வேலை பார்த்து வந்த நந்தலாலுடன் நெருங்கிப் பழகலானாள்.

நந்தலால் நல்லவன். நேர்மையானவன். தன் எசமானியின் இந்தச் செய்கை அவனை வியப்பில் ஆழ்த்தியது. உண்மையைக் கேட்கப் போனால், அவன் அவள் இச்சைக்கு இணைசேர இலேசில் இடம் கொடுக்கவில்லை. தன் உத்தியோகத்துக்கு வேட்டு வைத்துக் கொள்ளவும் விரும்பாததே காரணம். ஆயினும் ஊர் மக்களிடையே அவர்களுடைய தொடர்பைப் பற்றிக் கசமுசப் பேச்சு வளரலாயிற்று.

பத்மாவும் ஊர் வாய்க்கு மதிப்புக் கொடுப்பவள். பத்மா கலகலப்பாகப் பேசிப் பழகுபவளே தவிரத் தவறுனவழியில் முன்னேறுபவள் அல்ல. அவளது இளமை ஓர் அன்பனின் அரவணைப்பைநாடியது; உற்சாகத்தைத் தேடியது. முராரிலாலின் அன்பில் இவை குறைவாயிருந்தன. எனவே, அதிருப்தி தலை தூக்கியது.

நான் பத்மாவின் புகைப் படத்தைப் பார்த்திருக்கிறேன். வாளிப்பான உடலும், வட்டமான முகமும், விசாலமான கண்களும் பார்ப்பவர்களைப் பரவசப் படுத்துபவை தான். சிவந்த மேனியும் இளமை எழிலும் பத்மாவினிடத்தில் பெருங் கவர்ச்சியை உண்டு பண்ணியிருந்தன. முராரிலாலுக்கும் அவளுக்கும் கல்யாணம் எப்படி நடந்தது என்பது எனக்குத் தெரியாது. அவளது உறவினர்கள் பணத்தாசை பிடித்து ஒருவேளை அவளை முராரிலாலுக்கு மணம் செய்வித்தார்களோ, என்னமோ? ஆனால் பத்மாவைப் பொறுத்தவரை பணத்துக்கு அதிக மதிப்புக் கொடுப்பவளாகத் தோன்றவில்லை. பத்மாவைப் போலவே, அவள் நாட்டம் கொண்ட நந்தலாலும் பணத்தாசை கொண்டவனாக இல்லை.

முராரிலால் ஒரு பிரசுரகர்த்தன். ஒரு பத்திரிகையின் நிர்வாகி. ஆசிரியனும் அவனே. அவனது மாதப் பத்திரிகையும் புத்தகங்களும் நிறைய விற்று வந்தன இந்தியாவிலே. போர்க் காலத்தில் பிரசுர வேலை பல்கிப் பெருகி விட்டது. குறைந்த விலையில் நிறைந்த விஷயங்களைப் படிக்கக் கொடுத்து வந்தான் அவன். ஆனால் போருக்குப் பின் பத்திரிகையின் விற்பனை குறைந்து விட்டது. அதோடு கல்கத்தாவிலிருந்து ஒரு பிரசுரகர்த்தர் அதே போன்று வேறு ஒரு பத்திரிகை வெளியிடத் தொடங்கியிருந்தார். அதன் பலனாக முராரிலாலின் பத்திரிகையின் விற்பனை முன்னைக் காட்டிலும் பாதியாகி விட்டது.

கல்கத்தாப் பிரசுரகர்த்தரான உமாநாதர் படிப்பதற்கு அவன் கொடுத்தது போன்றே விஷயங்களைக் கொடுத்தும், பத்திரிகையை அறுகாக விலை குறைவாகக் கொடுத்தார். எனவே,



அவர் பத்திரிகையின் விற்பனை அதிகமாயிற்று. பலன் இரு பத்திரிகைகளுக்குமிடையே பலத்த போட்டி ஏற்பட்டது.

இருவரும் நஷ்டத்தை மேற்கொண்டு, ஒருவரை யொருவர் போட்டி போட்டுக்கொண்டு, குறைந்த விலையில் நிறைந்த பக்கங்களும் ஏராளமான படங்களும் கதைகளும் கொடுக்கலாயினர். இரு பத்திரிகைகளும் திவாலாகி விடுமோ என்ற நிலை ஏற்பட்டது.

இவ்விபத்தைத் தவிர்க்க வேண்டி இருவரும் சேர்ந்து பேசி ஒரு முடிவுக்கு வர இசைந்தனர். அவ்வாண்டு ஜனவரி மாதம் பத்தாம் தேதி கான்பூரில் முராரிலாலின் வீட்டில் சந்திப்பதாகவும் தீர்மானித்தனர்.

இரவு உமாநாதர் முராரி லாலின் வீட்டிலேயே தங்குவது என்றும் ஏற்பாடாகியது. உமாநாதருக்கு நரைத்த தலை. அவர் மிகவும் பிடிவாதக்காரர்.

நாள் முழுவதும் அவர் முராரிலாலின் வீட்டிலேயே இருந்தார். பத்மா அவரிடமோ, அவர்கள் பேச்சிலோ அதிக அக்கறை காட்டவில்லை. தன் கணவனுக்குப் போட்டியாகப் பத்திரிகை நடத்துபவர் என்பதற்காக அவள் அவரை வெறுக்கவும் இல்லை.

நந்தலாலுக்குப் பொருளாதார விஷயங்களில் அதிக ஈடுபாடு கிடையாது. ஆகையால் அவனும் இவ்விஷயத்தில் அதிக ஈடுபாடு காட்டாதவனாகவே இருந்தான். அதோடு நந்தலாலோ பத்மாவோ உமாநாதரின் விஷயத்தில் அதிகமாக அக்கறை செலுத்தாமலிருக்க' வேறு ஒரு காரணமும் இருந்தது. அது என்னவெனில், உமாநாதர் வருவதற்கு ஒரு மணி நேரத்துக்கு முன்னால் முராரிலால், பத்மாவையும் நந்தலாலையும் கூப்பிட்டுக் கடிந்து கொண்டான். தனக்கு அவர்களது கள்ளக் காதல் தெரிந்து விட்டதாகவும், அவர்கள் இப்படியே இருப்பதானால் பத்மாவோடு தனது உறவைத் துண்டித்துக் கொண்டுவிட விரும்புவதாகவும் கூறினான். அதுமட்டுமல்ல, பத்மாவேகூடத் தன் உறவைத் துண்டித்துக்கொண்டு நந்தலாலுடன் சென்று பகிரங்கமாக வாழலாம் என்றும் தெளிவுபடுத்தி விட்டான்.

ஆனால் நந்தலாலுக்கோ பத்மாவுக்கோ அறிவு பற்றாது. தங்களை மிரட்டி அசடாக்குவதற்காகவே அவன் இப்படிப் பேசியிருக்கிறான் என்பதைப் புரிந்து கொள்ளும் ஆற்றல் இல்லை. உண்மையிலேயே அவன் அப்படிச் செய்ய விரும்புகிறான் என்றே எண்ணிவிட்டார்கள் அவர்கள். பத்மாவுக்குப் பைத்தியமே பிடித்து விடும் போலாகி விட்டது. தனிமையில் அவள் நந்தலாலைக் கூப்பிட்டு "நான் என் கணவரது உறவை ஒரு நாளும் துண்டித்துக் கொள்ள மாட்டேன்" என்றாள்.

நந்தலாலோ இளைஞன். அவனுக்கும் அவள் பேச்சில் சாரம் இருப்பதாய்ப் பட்டது. முராரி லாலிடம் இதுவரை அவன் விரோதம் பாராட்டியதில்லை. ஆனால் இப்பொழுதோ...? அவன் அவருக்குப் பயங்கர விரோதியாகவே ஆகி விட்டான்.




இளமையின் துடிப்பு பத்மாவையும் நந்தலாலையும் ஆட்டிப் படைக்கவே இருவரும் முராரிலாலுக்கு உயிர்ச் சத்துருவாகி விட்டார்கள்.

உண்மையைக் கேட்கப் போனால் அவசரப்பட்டு முராரிலால் பெருந் தவறு இழைத்து விட்டான். இல்லாவிட்டால் இந்த இக்கட்டான நிலையில் அவர்களிடம் விரோதத்தை விலைக்கு வாங்கிக் கொண்டிருப்பானா?

அது எப்படியாவது போகட்டும். உமாநாதர் குறிப்பிட்ட நேரத்துக்கு 'டாண்' என்று வந்துவிட்டார். முராரிலால் தனக்கு அப்பொழுது ஏற்பட்டிருந்த மன நிலையிலும், தன்னால் இயன்ற அளவு அவரை வரவேற்று உபசரித்தான். அன்று மாலை சிலமணி நேரம்—அதிக நேரம் இல்லை — அவனோடு உமாநாதர் வியாபார விஷயமாகப் பேசிக் கொண்டிருந்தார். இருவரும் முன்பே ஒருவர் அபிப்பிராயத்தை இன்னொருவர் நன்கு அறிந்திருந்தார்கள். பேச்சு நீடிக்க நீடிக்க, உடன்படிக்கை ஏற்படும் என்ற நம்பிக்கை குறைந்து கொண்டே வந்தது. பேச்சு முடிந்த பிறகோ உடன்பாடு ஏற்படும் என்னும் நம்பிக்கையே அடியோடு அற்று விட்டது. இரவு தூங்கப் போகும் பொழுது, அவர்கள் பேச்சு வார்த்தை அனர்த்தமாக முடிந்தது. இருவருக்குமிடையே முன்னைக் காட்டிலும் பலத்த போட்டியே ஏற்படும் என்பதும் உறுதியாகி விட்டது. இருவரும் அழிந்து ஒழிவதைத் தவிர வேறு வழியில்லை என்பதும் ஊர்ஜிதமாகி விட்டது.

இது இயல்பாக எதிர்பார்க்கக் கூடியதுதானே? இருவரும் தங்கள் தங்கள் நலத்தையே நினைத்தனர். பலத்த போட்டி மூலம் தான் அது சாத்தியம் என்றும் எண்ணினர். எதிராளியை ஒடுக்க அதுவே சரியான அஸ்திரம் என்றும் தீர்மானித்தனர். இருவரும் பரஸ்பர விரோத பாவத்தை வளர்த்துக் கொண்டு விடைபெற்றனர். வீட்டில் உள்ளவர்கள் அனைவரும் அந்த நேரம் தூங்கி விட்டனர்.

மறு நாள் ஏழு மணிக்குப் பின்தான் உயிரற்ற சடலத்தைக் கண்டார்கள். முராரிலாலின் வேலையாள் தீனன்தான் முதலில் சவத்தைக் கண்டவன். அவன் பின்கட்டு வழியாக வேலைக்கு வந்தபோது வாசற்புறத்து அறை ஜன்னல் வழியே, நாற்காலி ஒன்றில் உயிரற்ற சடலம் கிடப்பதைக் கண்டான். அங்கே சிறிது இருளாக இருந்தது. அந்த வேலைக்காரன் கொலை செய்திருப்பானோ என்று சந்தேகிக்க இடம் இல்லை. அவன் கொலை செய்யவில்லை என்று நான் உறுதியாகக் கூறுகிறேன். அவன் கொடுத்த வாக்கு மூலம் எழுத்துக்கு எழுத்து உண்மையானது. தீனன் தினமும் இரவு நேரங்களில் தன்வீட்டுக்குப் போய்விடுவான். காலையில்தான் வேலைக்கு வருவான். வேலையாட்களில் நந்தலால் மட்டுமே பங்களாவில் தூங்குவது வழக்கம்.

தீனன் ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தான். ஆள் மூர்ச்சையற்றுக் கிடக்கிறாரோ என்று முதலில் அவனுக்குச் சந்தேகம் ஏற்பட்டது; ஆனால் செத்தவனின் தலை மயிரில்

இரத்தக் கறையைக் கண்டதும் அவன் சந்தேகம் விலகி விட்டது. அவன் உள்ளே சென்று எல்லோரையும் எழுப்பினான்.

மிஸ்டர் தேஷ்பாண்டே தருவிக்கப்பட்டார். சடலம் ஒரு சோபாவில் சாத்தப்பட்டிருந்தது. கழுத்து நரம்பிலிருந்து கசிந்த ரத்தக் கறை சோபாத் துணியில் படிந்திருந்தது. கொன்றவன் பின்னாலிருந்து தாக்கியிருக்கிறான். கழுத்தின் முக்கிய நரம்பு துண்டிக்கப்பட்டிருந்தது. யாரோ எதிர்பாராமல் தாக்கியிருக்க வேண்டும் என்பதும் சடலத்தைப் பார்க்கும் பொழுதே புலனாகியது. அருகிலேயே பெருங் கத்தி ஒன்று கிடந்தது. அதில் யாருடைய விரல் அடையாளங்களும் இல்லை.

இந்த நிகழ்ச்சிக்கு அதிகப்படியாகக் கற்பனை உருவம் கொடுக்காமல் இருந்தால், அந்தப் பங்களாவில் தூங்கிய மூன்று பேர்களில் ஒருவர்தான் கொலை செய்திருக்க வேண்டும். கொலை செய்ததன் நோக்கமும் அநேகமாக எல்லோருக்கும் தெரிந்ததே! தேஷ்பாண்டே இருபத்து நான்கு மணி நேரத்துக்குள் உண்மைக் குற்றவாளியைச் சிறைப்படுத்தி விட்டார்!''

இவ்வளவு தூரம் சொன்ன சேகரன் ஒரு கணம் பேசாமல் இருந்தான். பிறகு அங்கு குழுமியிருந்தவர்கள் அனைவரையும் ஒருமுறை பார்த்தான். எல்லோரும் ஆவலோடு அவனையேபார்த்துக்கொண்டிருந்தனர். ''இன்னும் சொல்ல வேண்டியது பாக்கி யிருக்கும்போலிருக்கிறதே!'' என்றான் ராமச்சந்திரன்.

''இல்லை. இன்ஸ்பெக்டர் தேஷ்பாண்டே சொன்ன கதை முழுவதையும் உங்களுக்குச் சொல்லி விட்டேன். அதற்குப் பின் அவர் என்னை ஒரு கேள்வி கேட்டார். அதற்கு உடனே டக்கென்று நான் பதில் அளித்து விட்டேன். அதே கேள்வியை இப்பொழுது நான் உங்களிடம் கேட்கிறேன். சொல்லுங்கள், பார்க்கலாம்! முராரிலாலைக் கொன்றது யார்?'' என்று கேட்டான் சேகரன்.

ராமச்சந்திரன் அவநம்பிக்கையோடு அவனைப் பார்த்தான். ''ஏதோ ஒரு விஷயத்தை நீ விட்டு விட்டாய்!'' என்று குற்றம் சாட்டினான்.

''இல்லை. என் பேச்சை நம்பு. நான் ஒன்றையும் ஒளிக்கவில்லை! இன்ஸ்பெக்டர் தேஷ்பாண்டே கூறிய எல்லா விவரங்களையும் ஒன்று விடாமல் உங்களிடம் கூறி விட்டேன். இவ்வளவுதூரம் சொன்ன பின்னும் உங்களுக்குப் புரியவில்லையென்றால் இன்னொரு விஷயத்தையும் சொல்லிவிடுகிறேன். முராரிலால் சரியாக ஏழு மணிக்கு இறந்தான். இப்பொழுதாவது உங்களுக்குப் புரிகிறதா?'' என்று கேட்டான்.

நண்பர்கள் குழாம் சிறிது நேரம் யோசித்தது. ஆனால் அவர்களுக்கு எதுவுமே விளங்கவில்லை.

''சரி.'' — ராமச்சந்திரன் வாட்டமுற்ற முகத்தோடு கூறினான். ''நாங்கள் தோல்வியை ஒப்புக் கொள்கிறோம். நீயே சொல், முராரிலாலைக் கொன்றது யார்?'' என்று கேட்டான்.

''தூக்குத் தண்டனையை நிறைவேற்றிய ஊழியன்!'' என்று கூறிய சேகரன் சிரித்துக் கொண்டே, ''உமாநாதரைக் கொன்ற குற்றத்துக்காக அவனுக்குத் தூக்குத் தண்டனை கிடைத்திருந்தது!'' என்றான்.

கண நேரம் ராமச்சந்திரன் ஆடாமல், அசையாமல் உட்கார்ந்திருந்தான். பிறகு உரத்த குரலில், ''நடக்காத காரியம்! இதெல்லாம் உன் பேச்சுச் சாமர்த்தியம்!'' என்றான்.

''இல்லை, நண்பா!'' சேகரன் அமைதியான குரலில் கூறினான்: ''கதை கூறிய விதம் தந்திரம் நிறைந்தது என்பதில் சந்தேகம் இல்லை. இதில் மூளையைச் செலவிட்டால் புரியாதது ஒன்றுமில்லை. அது மட்டுமல்ல; கதையில் உள்ள முடிச்சுகள் அனைத்தையும் உங்களுக்கு முன்கூட்டியே கூறி விட்டேன். தினன் ஜன்னல் வழியாகப் பார்த்த பொழுது இறந்தவனின் சடலம் சற்று இருட்டில் இருந்தது. செத்தவன் தலை மயிரில் ரத்தக் கறையைக் கண்டபின் தான் அவனுக்குக் கொலை யென்ற ஐயம் ஏற்பட்டது. அதோடு வடிந்த ரத்தம் கழுத்து நரம்பிலிருந்து வந்த ரத்தம் என்றுகூடச் சொன்னேன். நான் இன்னுமொரு விஷயமும் முன்கூட்டியே சொல்லி யிருக்கிறேன்; முராரிலாலின் தலை மயிர் கறுப்பு என்று! இப்பொழுது நீங்களே சொல்லுங்கள், கறுப்பு மயிரில் தோய்ந்த சிவப்பு ரத்தம் கண்களில் படுமா? அதுவும் சடலம் சற்று இருட்டில் இருக்கும் பொழுது? பார்ப்பவனோ ஜன்னலுக்கு வெளியே நின்று பார்த்திருக்கிறான். இருளில் கறுப்பு மயிரில் பட்ட இரத்தம் தெரியாது என்பதை யாரும் ஒப்புக்கொண்டேயாகவேண்டும். எனவே, இருளில் காணப்பட்ட சடலம் முராரிலாலின் சடலம் அல்ல என்பது உறுதியாயிற்று.

பத்மாவின் சவமாயிருக்கலாமோ என்றால் அப்படியும் இருக்க நியாயமில்லை. காரணம், அவள் இளம் வயதினள். அவள் தலை மயிரும் நல்ல கறுப்பானவை. இன்னொருவனான டிரைவர் நந்தலாலின் தலை மயிரும் கறுப்பே. எனவே ஒரே ஒரு விஷயம் நடந்திருக்கக்கூடும் என்றே தோன்றுகிறது. உமாநாதரின் தலைமயிர் வெளுப்பு. அதனால் அவர் தலைமயிரில் பட்ட ரத்தம்மட்டுமே கண்ணுக்குப் புலனாகியிருக்கக் கூடும். இருளில் சடலமிருந்தாலும் அதன் நரைத்த தலையில் இரத்தக்கறை தினனுக்குத் தெரிந்திருக்க நியாயமிருக்கிறது. உமாநாதரை யார் கொன்றிருக்கக்கூடும்? முராரிலால்தானே? நான் முன்கூட்டியே சொல்லியிருக்கிறேன், பத்மாவும், நந்தலாலும் அவரிடம் எந்தவிதமான அக்கறையும் காட்டவில்லை என்று! சிறைப்பட்ட பிறகே முராரிலால் கொல்லப்பட்டான் என்ற ஒரு விவரத்தைமட்டும் நான் சொல்லவில்லை. எனவே, நான் சொன்னதுதான் நடைபெறக் கூடியது. நடைபெற்றது!''

சேகரன் கூறிய கதையைக் கேட்ட நண்பர் குழாத்தினிடையே ஆழ்ந்த அமைதி நிலவியிருந்தது.




---

ஆதாரம்: ஹிந்திக் கதை

## ஐம்பதாவது அத்தியாயம்




டிரைவர் முத்தையா கூறிய செய்தியைக் கேட்டுப் பாரதி அப்படியே அதிர்ந்து போனாள். ஜமீன்தார் மாமாவை அவ்வளவு கெட்டவராக அவள் இதுவரை கற்பனை செய்தும் பார்த்ததில்லை. குளிக்காமல், சாப்பிடாமல் நாட்கணக்கில் சீட்டாட்டத்துக்கு உட்காருவார். குதிரைப் பந்தய சீஸனில் எந்தெந்த ஊரில் எல்லாம் பந்தயம் நடக்கிறதோ அங்கெல்லாம் போவார். கொஞ்சம் குடிப் பழக்கமும் உண்டு. ஆனால் நியாயத்தையும் நேர்மையையுமே உறிஞ்சிக் குடித்து விடுகிற அளவுக்கு அவர் மிகப் பெரிய குடிகாரர் என்பதை இன்று டிரைவர் முத்தையா தெரிவித்த செய்தியால் அவள் திட்டமாகப் புரிந்துகொண்டு விட்டாள்.

முந்திய தினம் இரவில் இதே காரில் டிரைவர் முத்தையாவையும் உடன் வைத்துக்கொண்டு கல்லூரி முதல்வரும் மஞ்சள்பட்டி ஜமீன்தாரும் காரில் போகும்போதே ஹாஸ்டல் கூரை ஷெட்டில் நெருப்பு வைத்து விட ஏற்பாடு செய்து விட்டு அந்தப் பழியைச் சத்திய

மூர்த்தியின் தலையில் சுமத்திக் கல்லூரியிலிருந்து அவனை வெளியேற்றி விடுவது என்று சதித் திட்டம் வகுத்துப் பேசிக் கொண்டு போனார்களாம். அந்தச் சதிப் பேச்சைத் தன் இரண்டு காதுகளாலும் கேட்டுக் கொண்டே காரைச் செலுத்திச் சென்றதாகப் பயந்து கொண்டே இப்போது அவளிடம் தெரிவித்து விட்டான் டிரைவர் முத்தையா.

'சத்தியமூர்த்தியை டிஸ்மிஸ் செய்து இந்தக் கல்லூரியிலிருந்து வெளியே அனுப்புவதற்குச் சரியான காரணம் வேண்டும் என்பதற்காகக் காலேஜ் பிரின்ஸிபாலும் நிர்வாகியும் ஹாஸ்டலிலிருந்த பழைய கூரை ஷெட்டுக்குத் தாங்களே நெருப்பு மூட்டி விட்டு அவர் மேல் பழியைச் சுமத்தியிருப்பதாகத்தான் மாணவர்கள் எல்லாரும் பேசிக் கொள்கிறார்கள்' என்று சிறிது நேரத்துக்கு முன் மகேசுவரி தங்கரத்தினம் கூறிய போது 'அப்படியுமா செய்வார்கள்?' என்று அதை நம்பத் தயங்கிய பாரதி இப்போது நம்பியே ஆக வேண்டியிருந்தது. டிரைவர் முத்தையா பொய் சொல்ல மாட்டான். நீண்ட காலமாகப் பூபதியின் குடும்பத்தில் ஒருவனாகக் கலந்து பழகி விட்ட நம்பிக்கை வாய்ந்த தொழிலாளி அவன். அவனுடைய வார்த்தைகளையும் — மகேசுவரி தங்கரத்தினம் கூறியவற்றையும் இணைத்துச் சிந்தித்து அப்படியே நம்பினாள் அவள். சத்தியமூர்த்தி அவளிடமிருந்து விலகி யிருந்த காலத்திலும் அவளுடைய இதயத்தின் அந்தரங்கம் அவனைத் தன்னிடமிருந்து விலக்கி விடவில்லை.



''என்னுடைய கண் பார்வைக்கு எட்டிய மட்டும் ஆகாயத்தில் ஒரே ஒரு பிரகாசமான நட்சத்திரம்தான் தெரிகிறது! அந்த நட்சத்திரத்தையும் நீ மறைக்க முயலாதே மேகமே! அப்படியே நீ மறைத்தாலும் மறுபடி அந்த ஒளி மயமான என் இலட்சிய நட்சத்திரம் தெரிகிற வரை நான் அதைப் பார்க்கத் தவித்துக் கொண்டேயிருப்பேன் என்பதை நீ மறந்து விடாதே'' என்ற பொருள்பட நவநீத கவியின் உருக்கமான பாடல் ஒன்று உண்டு. சத்தியமூர்த்தி தன்னை விட்டு விலகிச் செல்ல முயன்ற காலத்திலும் இந்தப் பாட்டை நினைவு கூர்ந்து பாரதி நெகிழ்ந்து உள்ளுருகித் தவித்திருக்கிறாள். வெளிப்படையாக எல்லாப் பெண்களையும்போல் ஆற்றாமை, கோபம், போலி விரோதம் எல்லாவற்றையும் அவன்மேல் கொண்டு விட்டாற் போல அவளும் அவனிடம் நடித்திருக்கலாம். ஆனால் அவளுடைய அந்தரங்கம் மௌனமாக அவனுக்காகத் தவித்திருக்கிறது. அவளுடைய அந்தரங்கத்தில் அவன் ஒரு தவப் பயனாக நிறைந்திருக்கிறான். யாருடைய அழகான பாதங்கள் அவள் இதயத்தில் நிறைந்திருந்தனவோ அவருடைய அதே பாதங்கள் இன்று மல்லிகைப் பந்தலின் தெருக்களில் வருந்த வருந்த நடந்து வந்து போலீஸ் ஸ்டேஷனுக்குள் நுழைந்த காட்சியை அவளும் தன் கண்களாலேயே காண நேர்ந்து விட்டது. அவளுக்குத் தெரிய வந்த நிகழ்ச்சிகளையெல்லாம் ஒன்று சேர்த்து நினைத்தபோது அவள் மனம்



# பொன் விலங்கு

மணிவண்ணன்—

எரிமலையாகக் குமுறியது. டிரைவர் முத்தையாவைப் போன்ற நாணயமான மனிதனே தன்னிடம் எடுத்த எடுப்பில் நடந்த உண்மையை அப்படியே சொல் லத் தயங்கிப் பட்டும் படாமலும் வேறு விதமாகச் சொல்லியதை நினைத்த போது கெட்டவர்களைத் தவிர அவர் களுக்குப் பயப்படுகிறவர்களும் — இருந் தாக வேண்டிய அவசியத்தைக் கடைப் பிடிக்கிற உலக நியதியை அவள் புரிந்து கொள்ள முடிந்தது. போலீஸ் நிலை யத்தின் அருகே சத்தியமூர்த்தி அழைத் துக் கொண்டு போகப்படுவதைப் பார்த் துத் தான் காரை நிறுத்தச் சொல்லி விட்டுப் பரபரப்பாகக் கீழே இறங்கிப் பார்த்த போது, ''இவரு ஏதோ பையன்களைத் தூண்டி விட்டுக் காலேஜ் ஹாஸ்டலுக்கு நெருப்புவச்சிட்டாராம். அதுனாலே....' ஜமீன்தார் ஐயாதான் போலீஸிலே சொல்லி ஆளை உள்ளார வைக்கிறத்துக்கு ஏற்பாடு பண்ணியிருக் கிறாரு'' என்று மட்டும் சொல்லித்

**பொன் விலங்கு**

ஒவ்வொரு பெண்ணின் அநு தாபமும் வெறுப்பையும் செய்ய முடியாதவரை வெறும் அழுகை யில் போய்த்தான் நிறைய முடியும்.

தனக்கு ஒன்றும் தெரியாதது போல் இருந்து விட்ட அதே டிரைவர் முத்தையாதான் அப்புறம் மனம் பொறுக்காமல் தனக்குத் தெரிந்த உண்மையைச் சொல்ல இப்போது இப்படி முன் வந்திருக்கிறான் என்பதை யும் அவள் சிந்திக்கத் தவற வில்லை. அவளோடு உடன் வந்திருந்த மகேசுவரி தங்கரத்தினம்—சத்தியமூர்த்திக்கு அநீதி இழைக்கப்பட்டதன் காரணமாக மாணவ மாணவிகளின் மனங்கள் குமு றிக் கொண்டிருப்பதைப் பற்றிக் கூறி னாள். வேலை நிறுத்தத்தினால் அநியாய மாகக் கல்லூரிப் பாடங்களும், வகுப்புக் களும் வீணாவதைப் பற்றி வருத்தப் பட்டுக் கொண்டாள்.

''காரில் என்னை இங்கு அழைத்துக் கொண்டு வரும் போது நீயும்தான் பார்த்தாயே? மாணவர்கள் நூற்றுக் கணக்காகப் போலீஸ் ஸ்டேஷன் வாச லில் வருத்தம் தோய்ந்த முகங்களோடு வந்து கூடி நிற்கிற பரிதாபத்தை என்ன வென்று சொல்வது? இத்தனை பேரு டைய பிரியத்தையும் அநுதாபத்தையும் சம்பாதிக்க முடிந்த ஓர் ஆசிரியர் எப் படிக் கெட்டவராக இருக்க முடியுமடீ பாரதீ ?''

''அவர் கெட்டவராயிருக்க வேண்டு மென்றுகூட நாமாக ஏன் நினைக்கவேண் டும்? அவருக்கு வேண்டாதவர்கள் எல் லாரும் ஒன்று சேர்ந்து அவரைக் கெட் டவராக நிரூபித்து விட முயல்கிறார்கள் என்று மட்டும் இதனால் புரிந்து கொள். வேண்டியவர்களுடைய குற்றங்களை மறைத்து விட்டு ஒரேயடியாக மேடை யில் புகழ்வதும் — வேண்டாதவர்களு டைய குணங்களை மறைத்து விட்டு ஒரேயடியாகத் தூற்றுவதும் அரசியலில் தான் உண்டு. மெல்ல மெல்லச் சமூக வாழ்விலும் அந்தச் சந்தர்ப்ப நியா யம் வந்து சூழ்ந்துகொண்டு விடும் போலிருக்கிறது.''

இதைக் கூறிவிட்டுப் பாரதி மேலே ஒன்றும் பேசத் தோன்றாமல் பெருமூச்சு விட்டாள். அவளுக்கு ஆறுதலாக மகேசு வரி தங்கரத்தினம் இன்னும் சிறிது நேரம் அங்கே உடனிருந்து பேசிக் கொண்டிருந்து விட்டுக் கல்லூரி விடு திக்குத் திரும்பிச் சென்றாள். அவளும் போனபின் பாரதிக்கு அங்கு இருப்புக் கொள்ளவே பிடிக்க வில்லை. ஜமீன் தாரும் — அவருடன் கண்ணாயிரம் என்ற கொடியவனும் அந்த வீட்டில் வந்து உட்கார்ந்து கொண்டு என்னென் னவோ சூழ்ச்சிகளைப் புரிவதாகத் தோன்றியது அவளுக்கு. மகேசுவரி தங்கரத்தினத்தைக் காரில் கல்லூரி விடு திக்குக் கொண்டு போய் விட்டுத் திரும்பிய டிரைவர் முத்தையா வீட்டு ஹாலில் தனியாக உட்கார்ந்து கண் கலங்கி அழுது கொண்டிருந்த அவளிடம் ஆறுதலாக ஒரு செய்தி சொன்னான்.

''பாரதி அம்மா! உங்களுக்கு ஒரு நல்ல சேதி. அவரை யாரோ சிநேகி தங்க ஜாமீன் கொடுத்துப் போலீஸ் ஸ்டேசன்லேருந்து வீட்டுக்கு அழைத் துக் கொண்டு போயிட்டாங்க.... பிரியம்னாப் படிக்கிற பையன்களுக்கு இப்படியும் ஒரு பிரியம் இருக்குமான்னு எனக்கு ஆச்சரியமா யிருக்குது அம்மா! அவரு போலீஸ் ஸ்டேஷன் வாசற்படி யிலேயிருந்து கீழே இறங்கினாரோ இல் லியோ, அப்பிடியே அலை அலையாய்ப் பையன்கள் அவரைச் சூழ்ந்து கொண்டு ஊர்வலம் போலக் கூடப் போறாங்க.... அவர் பேரைச் சொல்லி 'வாழ்க' என் கிற குரல்களும், 'நீதி வேண்டும்' என்

கிற குரல்களுமாக மாளிகையே பிளந்திடும் போலிருக்கு. ஜமீன்தார் ஐயா பேரிலேயும் பிரின்ஸிபால் பேரிலேயும் பையன்களுக்கு ஒரே வெறுப்பா மூண்டிருக்கு'' என்று டிரைவர் முத்தையா திரும்பி வந்து ஏதோ இரகசியத்தைச் சொல்வது போல் அவளிடம் சொல்லிய போது அப்போது அதைச் சொன்னால் தான் அவனுக்கு ஆறுதலா யிருக்கும் என்று அவன் தனக்குத் தானே புரிந்து கொண்டிருப்பது போல் தெரிந்தது. தளர்ந்து நலிந்த குரலில் பாரதி முத்தையாவைக் கேட்கலானாள்:

''முத்தையா! காரில் இருந்தபடியே அவரைப் பார்த்தாயோ? அல்லது நீ பக்கத்தில் போய் அவரைப் பார்த்தாயோ ?''

''பக்கத்தில் நெருங்க முடியுமா அம்மா? எவ்வளவு பெரிய கூட்டம்?''

''அதற்கில்லை. இப்படியெல்லாம் பொய்யாகப் பழி சுமத்தி அவரை மனம் தளரச் செய்திருக்கிறார்களே பாவிகள்; அதனால் மிகவும் வாடிச் சோர்ந்து போயிருக்கிறாரோ என்று தெரிந்து கொள்வதற்காகத்தான் உன்னைக் கேட்டேன்......''

''அவருக்கு என்னம்மா சோர்வு ? நியாயம் அவர் பக்கத்திலே இருக்குது. ராஜாவாக நடந்து போனாரு.....''

டிரைவர் முத்தையா இயல்பாக இப்படிக் கூறினானா அல்லது தன் மனத்தைப் புரிந்து கொண்டு, இப்படிக் கூறினால்தான் தனக்குத் திருப்தியாயிருக்குமென்று கூறினானா என்பதைப் பாரதியால் விளங்கிக் கொள்ள முடியவில்லை. பத்தரை மணிக்கு ஜமீன்தாரும், கண்ணாயிரமும் உணவு மேஜைக்கு வந்தார்கள். அவர்களைப் பார்க்கப் பிடிக்காமல் — அவர்களோடு பேசவும் — சேர்ந்து சாப்பிட உட்காரவும் கூடப் பிடிக்காமல் பாரதி தோட்டத்துப் பக்கம் எழுந்து போயிருந்தாள். ஆனால் ஜமீன்தாரே அவளைத் தேடிக் கொண்டு தோட்டத்துக்கு வந்து விட்டார். அவருடைய முகத்தைப் பார்க்கவே வெறுப்பாகவும் அருவருப்பாகவும் இருந்தது அவளுக்கு. வெளிப்படையாக எதையும் சொல்லவும் முடியாமல் யார் மேலும் அநுதாபத்தைக் காண்பித்துக்கொள்ளவும் முடியாமல் இரண்டுங் கெட்டான் நிலையில் தவித்தாள் அவள். ஜமீன்தாரோ அவள் மேல் அன்பையும் பாசத்தையும் அள்ளிப் பொழிவதாகப் பொய்யாய் நடித்துக் குழைந்தார்.

''வர வர நீ சரியாச் சாப்பிடறதில்லேன்னு சமையக்காரங்க ஒரேயடியாப் புகார் செய்யறாங்க. இப்படி இளைச்சா உடம்பு என்னத்துக்கு ஆகும்? 'டாண்'ணு பத்தரை மணியடிச்சா சாப்பாட்டு மேஜைக்கு வந்துடணும். நீ காலேஜ் போகத் தொடங்கினப்புறம் ஒம்பதரை மணிக்குச் சாப்பாட்டை வச்சுக்கலாம்......''

ஜமீன்தாருடைய இந்தப் பரிவான விசாரணைக்குப் பதில் ஒன்றும் சொல்லாமல் உதட்டை அழுத்திக் கடித்துக் கொண்டே அவருக்குப் பின்னால் வெறுப்போடு நடந்த பாரதி சிறிது நேரம் கழித்து, ''காலேஜிலே ஏதோ ஸ்டிரைக்காமே? ஊரெல்லாம் ஒரே புரளியாயிருக்கிறதே ?......'' என்று தைரியமாக அவருடைய மனத்தின் உள்ளெண்ணத்தை அறியும் நோக்குடன் பேச்சை ஆரம்பித்தாள். இந்தப் பேச்சை அவள் ஆரம்பித்த போது இருவரும் உணவு மேஜைக்கு எதிரே போய்ச் சாப்பிட உட்கார்ந்திருந்தார்கள். கண்ணாயிரமும் பேந்தப்பேந்த விழித்துக் கொண்டு வந்து சாப்பிட உட்கார்ந்திருந்தார். அவள் இப்படிக் கேட்டதும் — அந்தப் பேச்சை மேலே வளர்க்க விரும்பாமல் அப்படியே அசுவாரஸ்யமாக விட்டு விட்டாற் போன்ற ஒரு வகை மௌனம் ஜமீன்தார் பக்கம் நிலவியது. சமையற்காரர் பரிமாறத் தொடங்கியிருந்தார். சாப்பாட்டைத்

## அடுத்த இதழில் ▼▼▼

கலை வளர்க்கும் கோயில்கள் :

எத்திராஜ் கல்லூரி

✿

கல்லூரிக்கு ஒரு கோமாளி

- ஜி. எஸ். பாலகிருஷ்ணன்

✿

நாடாண்ட நங்கையர் :

மேரியா தேரீஸா



ஜனவரி மாதத்திய நெடுங்கதை

ஸோமாஸ் எழுதும்

நர்மதாதேவி



தொடங்குமுன் திடீரென்று அப்போது தான் நினைத்துக் கொண்டவர் போல், ''கண்ணாயிரம்! மதுரைக்கு ஒரு 'அர்ஜெண்ட் கால்' புக் பண்ணு. கணக்குப் பிள்ளை பேரைச் சொல்லி நம்ம பங்களா நம்பருக்குக் கூப்பிடு.....'' என்றார் ஜமீன்தார். கண்ணாயிரம் உடனே எழுந்து போய் அதே 'டைனிங் ஹாலில்' ஒரு மூலையிலிருந்த டெலிபோனில் மதுரைக்கு 'டிரங்கால்' புக் பண்ணி விட்டு வந்தார். அப்போது பாரதி தன்னைக் கேட்ட கேள்வியை மறந்தாற் போல விட்டு விட்டு, ''தலையிலே இடி விழுந்த மாதிரிப் பெரிய துக்கம் நடந்து போச்சு. அப்பா போனதைத்தான் சொல்றேம்மா! உன் மனசுக்கும் இனிமே ஒரு ஆறுதல் வேணும்! இன்னிக்கோ நாளைக்கோ நம்ம கணக்குப் பிள்ளை மோகினியை மதுரையிலேயிருந்து காரிலே இங்கே அனைச்சிக்கிட்டு வந்திடுவாரு. நீ அவகிட்டப் பரத நாட்டியம் கத்துக்க. உன் மனசுக்கும் ஒரு மாறுதல் வேணுமில்லே? அந்தப் பொண்ணுக்கு வீணைகூட நல்லாத் தெரியும். நீ அதையும் அவகிட்டவே படிச்சுக்கலாம்'' என்று சம்பந்தமில்லாமல் வேறு ஏதோ பேசத் தொடங்கினார் ஜமீன்தார். பாரதிக்கு இதைக் கேட்டு உள்ளூறக் கோபம் வந்தாலும் அதை அடக்கிக் கொண்டு அவள் மௌனமாயிருந்தாள். சாப்பாடு முடிவதற்குள்ளேயே 'டிரங்கால்' கிடைத்து ஜமீன்தார் பேசி முடித்து விட்டார். மறுநாள் மாலை மோகினியும் கணக்குப் பிள்ளையும் காரில் வருவார்கள் என்றும் பேசிவிட்டு வந்து தெரிவித்தார்.

''ஒரு வாரம் வரை மோகினி இந்தப் பங்களாவிலேயே உன்னோடு தங்கியிருக்கட்டும்! அப்புறம் பக்கத்து அவென்யூவிலுள்ள மஞ்சள்பட்டி ஜமீன் அரண்மனையிலே அவள் நிரந்தரமாகத் தங்க ஏற்பாடு செய்துக்கலாம். நான்கூட இனிமே அங்கேயே நம்ம அரமனையிலே குடியேறிவிட நினைச்சிருக்கேன்'' என்றார்.

சாப்பிட்டு முடித்தபின் ஹாலில் மூவரும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கும் போது திடுமென்று எதிர்பாராத விதமாகப் பிரின்ஸிபால் வந்து சேர்ந்தார். அவர் முகம் பேயறைபட்டாற் போல் வெளிறிப்போய் இருந்தது. கண்ணாயிரமும் ஜமீன்தாரும் பிரின்ஸிபாலை அழைத்துக் கொண்டு முன் பக்கத்து அறைக்குப் போனார்கள். பாரதிக்கு அவர்கள் என்ன பேசிக்கொள்கிறார்கள் என்று அறிய ஆசையிருந்தது. ஆனால் அதை அவள் அறிந்து கொள்ள முடியாமல் அவர்கள் முன் பக்கத்து அறையையும் கடந்து வெளியே தோட்டத்து மரத்தடியில் போய்ப் பேசிக்கொண்டு நின்றார்கள். பதினைந்து நிமிடங்களுக்குப் பின் ஜமீன்தார் மட்டும் உள்ளே திரும்பி வந்தார். கண்ணாயிரமும், பிரின்ஸிபாலும் காரில் அவசரமாக எங்கோ வெளியே கிளம்பிச் சென்றார்கள். ஏதோ சதித் திட்டத்துக்கு ஆலோசனை செய்கிறவர் போல் ஜமீன்தார் ஹாலில் குறுக்கும் நெடுக்குமாக உலாவிக் கொண்டிருந்த போது, ''காலேஜில் ஸ்டிரைக் ஆரம்பித்து ஒரு வாரத்துக்கு மேல் ஆகும் போலிருக்கிறதே?'' என்று இரண்டாவது தடவையாக அவரிடம் அந்தப் பேச்சைத் தொடங்கிப் பார்த்தாள் பாரதி.

''அதைப் பத்தி உனக்கென்ன வந்ததும்மா! அதெல்லாம் நிர்வாக விஷயம். நீ ஒண்ணும் தலையிடாதே....'' என்று அவள் அதைப் பற்றிப் பொதுவாகத் தன்னிடம் விசாரிப்பதையே விரும்பாதவர் போல் பேச்சை வெட்டினார் ஜமீன்தார். அப்போது அவருடைய கண்கள் சிவந்து கொடிய பார்வையோடு இருந்தன. முகத்தில் என்னும் கொள்ளும் வெடிக்கிறாற் போல் கடுங் கோபம் துள்ளிக் கொண்டிருந்தது.

''காலேஜ் ஆரம்பித்த நாளிலிருந்து இது வரை ஒரு ஸ்டிரைக் கூட வந்ததில்லை. அப்பா நயமாகவும் — பயமாகவும் எல்லாவற்றையும் சமாளித்து விடுவார்....... இப்பத்தான் எல்லாப் போதாத காலமும் ஆரம்பமாகியிருக்கு. வீணாகக் காலேஜுக்கும் கெட்டபேர்...'' என்று அவள் மேலும் எதையோ சாதாரணமாகப் பேசத் தொடங்கிய போது, ''வாயை மூடு! உனக்கு வேறே வேலை இல்லே? நீ முதல்லே உள்ளாரப்போ... சொல்றேன். ஸ்டிரைக்... மண்ணாங்கட்டி எல்லா யழுவும்தான் வரும்... அதைக் கவனிச்சுக்கத்தான் நானும் பிரின்ஸிபாலும் இருக்கோமே? உனக்கென்ன வந்திச்சுங்கறேன்?'' என்று சொல்லிச் சீறத் தொடங்கி விட்டார் ஜமீன்தார். யாரையோ உடனே கொலை செய்துவிட வேண்டும் போன்ற அவ்வளவு கோபம் அப்போது அவருடைய முகத்தில் மிகவும் குரூரமாகத் துடித்துக் கொண்டிருந்தது. பாரதி மேலே ஒன்றும் பேசாமல் உள்ளே போய்விட்டாள். ஒவ்வொரு பெண்ணின் அநுதாபமும் வேறெதையும் செய்ய முடியாத வரை வெறும் அழுகையில் போய்த்தான் நிறைய முடியும். அதையேதான் அப்போது அவளும் செய்தாள். **(தொடரும்)**

# நாட்டின் பாதுகாப்புக்கும்



# அபிவிருத்திக்கும்



# நெருங்கிய தொடர்பு உண்டு

நாட்டின் அபிவிருத்தித் திட்டங்களுக்கும், தேசிய பாதுகாப்பிற்கும் நெருங்கிய தொடர்பு இருக்கிறது. நாட்டில் ஏற்பட்டுள்ள அவசர நெருக்கடியை சமாளிக்க சில தொழில்களுக்கு புதிய முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது. மின்சாரத் திட்டங்கள், உருக்கு போன்ற அடிப்படைத் தொழில்கள், இயந்திரங்கள், இயந்திரக் கருவிகள், மின்சாரங்கள், நிலக்கரிச் சுரங்கங்கள், ரயில்வேக்கள், இரசாயனம் மற்றும் மருந்துகள் தயாரிப்புப் பயிற்சி ஆகியவைகள், துரிதகதியில் நடைபெற வழிவகைகள் செய்யப்பட்டுள்ளன.

இம்மாதிரி உறுதியான அஸ்திவாரத்திலேயே நாட்டின் பாதுகாப்புச் சக்தி உருவாகிறது. நம் பிரச்னைகளைத் தீர்ப்பதற்கு இது ஒன்றே ஏற்ற பணி.

உங்களால் முடிந்த ஒவ்வொரு வழியிலும்—எண்ணத்தாலும், சொல்லாலும், செயலாலும்-இந்த இயக்கத்திற்கு ஆதரவு அளியுங்கள். லக்ஷக்கணக்கான மக்களின் சலியாத உழைப்பாலும், பலனளிக்கும் உழைப்பாலுமே இந்தியா தன் படை பலத்தை அபிவிருத்தி செய்ய முடியும் என்று கருதுகிறது.



திட்டத்திற்கு
உதவுங்கள்



இந்தியாவின் பாதுகாப்பைப்
பலப்படுத்துங்கள்

# பத்தினிக் கோட்டம்

## அத்தியாயம் முப்பத்தைந்து
## சண்டமாருதம்

'ஆந்திர இளவரசியாரை நோக்கி ஒரு மிகப் பெரிய புயல் வந்து கொண்டிருக்கிறது. அந்தப் புயல் அவருடைய புற வாழ்க்கையை மட்டுமல்ல, அக வாழ்க்கையையும் அலைக்கழித்து வீழ்த்தி விடக் கூடிய தன்மை வாய்ந்தது. எண்ணத்தில் நிதானமும், இலட்சியத்தில் பற்றும், செயலில் உறுதியும் இருந்தால் மட்டுமே அதை எதிர்த்து நின்று வெற்றி பெறலாம். இதனை முன்கூட்டியே எடுத்துக் கூறி எச்சரித்து விட்டுப் போகவே இங்கு வந்தேன்.'

சில தினங்களுக்கு முன் எதிர்பாராத விதமாக வந்த சமண சங்கத் தலைவர் சமந்தபத்திரர், முன்பின்னாக எவ்வித விளக்க விவரமுமின்றி இவ்வாறு சொல்லி விட்டுப் போனதையே இரவு பகலாகச் சிந்தித்துச் சிந்தித்துக் குழம்பிக்கொண்டிருந்த ஆந்திர இளவரசி உத்தமசீலி, அதற்கு முன் சோழ இளவரசி இளங்கோப்பிச்சி தெரிவித்த ஒரு விஷயத்தையும் இந்தக் கூற்றுடன் சேர்த்து நினைத்துப் பார்த்தாள்: 'பாவம் ஆந்திர இளவரசியாருக்குப் பல்லவ நாட்டில் இப்போது என்ன நடக்கிறது என்றே தெரியாது போலும்! அது தெரிந்திருந்தால் இத்தனை இனிய கற்பனைகளில் சஞ்சரித்துக் கொண்டிருக்க மாட்டார்.'

காஞ்சி அரண்மனைக்குத் தன்னை அழைத்துப் போவதற்காகப் பல்லவ மன்னரிடமிருந்து விசேஷப் பரிவாரங்கள் வெகு விரைவிலே வரும் என்று எதிர்பார்த்துக்கொண்டு இருப்பதாக அவள் சொன்னபோது இளங்கோப்பிச்சி கூறிய இந்தப் பதிலுக்கும், சமந்தபத்திரரின் அந்தக் கூற்றுக்கும் ஏதோ தொடர்பு இருப்பதாகவே அவளுக்குத் தோன்றியது. அத்துடன், தன்னைப் பார்ப்பதற்கென்றே பெருவளநல்லூருக்குப் போய் அங்கிருந்து திருப்பருத்திக் குன்றத்துக்கு வந்த பல்லவ மன்னன் திடீரென்று அந்த நோக்கத்தை மாற்றிக் கொண்டு காஞ்சிக்குப் புறப்பட்டுப் போய் விட்டது பற்றித் தான் இதுவரை கற்பித்துக் கொண்டிருக்கும் காரணமும் சரியல்ல என்று இப்போது அவளுக்குப் பட்டது. தன்னால் தெரிந்து கொள்ள முடியாமலும், தான் தெரிந்து கொள்ளாமலும் இந்த நாட்டிலே தன்னைப் பற்றி — தன் காதல் திருமணத்தைப் பற்றி — ஏதோ ஒரு பாதகமான சூழ்நிலை உருவாகி இருக்கிறது என்றும், அதனாலேயே பல்லவ மன்னர் தன்னைப் பார்க்காமல் போய் விட்டிருக்கிறார் என்றும், அதன் காரணங்களைத் தெரிந்து கொண்டுதான் சமண சங்கத் தலைவரும், சோழ இளவரசியும் தன்னை எச்சரிப்பது போல் இவ்வாறு சூசகமாகப் பேசி இருக்கிறார்கள் என்றும் அவள் எண்ணினாள்.

இந்த விதமான அநுமானங்களைப் புலப்படுத்திக் கொண்டதுமே அவளுடைய மனம் முன்னை விடப் பெரிதும் கலங்கிக் குழம்பி விட்டது. தன்னை மீறிய பயத்தினால் தவித்துத் தடுமாறிய அவள், திடீரென்று ஒரு முடிவுக்கு வந்தவளாய் எழுந்து அடுத்த அறையை நோக்கி விரைந்து சென்றாள்.

அங்கே, அரைகுறையாகத் தொடுத்த பூமாலை யொன்றைக் கையில் வைத்துக் கொண்டு அதில் உள்ள பூக்களை ஒவ்வொன்றாக உருவிக் கூடையில் போட்டவாறு தலை குனிந்து அமர்ந்திருந்தாள் இளங்கோப்பிச்சி. அவளது அழகிய கருநீலக் கண்களிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் வழிந்துகொண்டிருந்தது.

இந்தக் காட்சியைக் கண்ட உத்தமசீலி வியப்புற்றவளாய் அவ்வறையின் கதவருகிலேயே தயங்கி நின்றாள். ஏற்கனவே தன் சொந்தத் துயரங்களால் நைந்து நலிந்து கிடந்த அவள் மனம் இப்போது இளங்கோப்பிச்சியை அந்நிலையில் காண நேரிட்டதால் மேலும் வேதனையடைந்து துடித்தது. ஆயினும் தன்னைப்போல் இன்னொரு பெண் சோகத்தில் ஆழ்ந்து கண்ணீர் சிந்திக் கொண்டிருப்பதைக் காண அவளுக்கு ஒரு விசித்திர ஆறுதலாகவும் இருந்தது.

வாயில் நிலையருகே அவள் நின்றிருந்ததால் ஏற்பட்ட வெளிச்ச அடைப்பை உணர்ந்து சட்டென்று நிமிர்ந்த இளங்கோப்பிச்சி அவசரமாகத் தன் கண்களைத் துடைத்துக்கொண்டு எழுந்து, ''வாருங்கள், இளவரசி!'' என்றாள் உயிரற்ற புன்முறுவலுடன். ''நானே உங்களுடைய அறைக்கு வரவேண்டும் என்றிருந்தேன்; அதற்குள் நீங்களே வந்துவிட்டீர்கள்.''

''முன்னறிவிப்பின்றி வந்து உன் தனிமையில் குறுக்கிட்டு விட்டேன், இல்லையா? மன்னித்துக் கொள்!'' என்று




மென்னகை புரிந்தவாறு அறைக்குள் பிரவேசித்த உத்தமசீலி, கீழே கிடந்த பூக்களையும் இளங்கோப் பிச்சியின் கையில் அரைகுறையாகத் தொடுக்கப் பெற்றிருந்த மலர்ச் சரத்தையும் மாறிமாறிப் பார்த்துக் கொண்டே, ''தொடுத்த மாலையை ஏன் பிரிக்கிறாய்? நன்றாகத்தானே இருக்கிறது ?'' என்று கேட்டாள்.

''முதலில் அழகாகத்தான் தொடுத்தேன், இளவரசி! ஆனால் இடையிலே ஒரு சிறு தவறு நேர்ந்து விட்டது. முல்லைப் பூ வரிசையில் எப்படியோ செவ்வலரி மலரொன்றும் சேர்ந்து விட்டது. அதனால் தான்....'' என்றாள் இளங்கோப்பிச்சி விரக்தி படிந்த புன்முறுவலுடன்.

''என்ன இருந்தாலும், தொடுத்த மாலையைப் பிரித்தால் மீண்டும் அதைத் தொடுக்க முடியாதபடி பூக்கள் கசங்கி வாடி விடுமே?'' என்றவாறு கீழே



சாப்பிடுபவர்: பரவாயில்லே அப்பா இன்னிக்குக் காப்பி கொஞ்சம் சுமாரா இருக்கு!

சர்வர்: அடாடா! எனக்குப் போட்டு வச்ச காப்பியைத் தவறிப் போய் உங்களுக்குக் கொடுத்துத் தொலைச்சுட்டேன் போலிருக்கு!

குனிந்து, சிதறிக் கிடந்த வண்ண மலர்களை மென்மையாக வாரிப் பூக்கூடையில் போட்டான் உத்தமசீலி.

''நமக்குத் தெரிகிறது, இந்த உண்மை; ஆனால் நம்மை ஆட்டிப் படைக்கும் விதிக்குத் தெரிய வில்லையே இளவரசி!''

வியப்புடன் தலை நிமிர்ந்த உத்தமசீலி அவனை உற்று நோக்கினாள்.

சற்று நேரம் அமைதியாக நின்றிருந்த இளங்கோப்பிச்சி, ''ஆந்திர இளவரசியார் ஏதோ முக்கிய விஷயமாகப் பேச வந்திருக்கிறார் என்று நினைக்கிறேன்...'' என்றான் தணிந்த குரலில்.

''ஆமாம், இளங்கோப்பிச்சி! உன் பேச்சிலிருந்து எழுந்த சந்தேகம் ஒன்றை உன்னிடமே கேட்டுத் தெரிந்து கொள்வதற்காகத்தான் வந்திருக்கிறேன்'' என்றவாறு சிறிய சாளரம் ஒன்றை நோக்கி நடந்த உத்தமசீலி சட்டென்று திரும்பி, ''அன்றொரு நாள், பல்லவ நாட்டில் இப்போது என்ன நடக்கிறது என்றே தெரியாமல் வெறும் கற்பனைகளில் நான் சஞ்சரித்துக்கொண்டிருப்பதாகச் சொன்னாயே, அதன் வெளிப்படையான அர்த்தம் என்ன?'' என்று தன்னை மீறிய படபடப்புடன் கேட்டாள்.

இளங்கோப்பிச்சியின் வதனத்தில் சோக மயமான சிறு நகையொன்று தவழ்ந்தது. ''இந்தக் கேள்வியை அன்றே என்னிடம் கேட்பீர்கள் என்று எதிர்பார்த்தேன்; ஆனால் இத்தனை நாட்கள் கழித்து வந்து கேட்பதையறிய எனக்கே ஆச்சரியமாக இருக்கிறது.''

''ஆச்சரியப்படுவது இருக்கட்டும். நான் கேட்பதற்கு உன் பதில் என்ன?''

ஆழ்ந்த அநுதாபத்துடனும் வாஞ்சையுடனும் அவளைப் பார்த்துக்கொண்டே அருகில் நெருங்கி வந்த இளங்கோப்பிச்சி மிருதுவான குரலில் சொன்னான்: ''உலகில் பெண்ணாகப் பிறந்தவர்களுள் நீங்கள் மிகவும் பாக்கியசாலி என்றுதான் இத்தனை நாட்களும் எண்ணியிருந்தேன்; ஆனால் இப்போது உங்களைப் போன்ற துர்ப்பாக்கியசாலி வேறு யாருமே இருக்க மாட்டாள் என்று நினைக்க வேண்டியதாகி விட்டது!''

உத்தமசீலியின் மனம் உள்ளூற அதிர்ந்தது. ஆயினும் அதை வெளியே காட்டிக் கொள்ளாமல், ''விஷயத்தைச் சொல், இளங்கோப்பிச்சி! என்னுடைய பாக்கியத்தை நீ ஏன் துர்ப்பாக்கியமாகக் கருதுகிறாய்?'' என்று வினவினாள்.

''துரதிர்ஷ்டவசமாக நீங்கள் சைவ சமயத்தைச் சார்ந்தவராக இல்லையே என்பதுதான் அதற்குக் காரணம், இளவரசி!''

''அதிர்ஷ்டவசமாக நான் சமண சமயத்தைச் சார்ந்தவளாயிருப்பதால், யாருக்கு என்ன சங்கடம் ஏற்பட்டு விட்டதாம்?''

''உங்களுக்கும், உங்களைக் காதலிப்பவருக்கும், அவரால் ஆளப்படும் இந்தப் பல்லவ நாட்டுக்குமே பல சங்கடங்கள் தோன்றி, அவை வெகு வேகமாக வளர்ந்தும் வருகின்றன.''

இதைக் கேட்ட உத்தமசீலியின் மனத்தில் மின்னலொன்று பளீரிட்டுச் சுருண்டது. சமண சங்கத் தலைவர் சமந்தபத்திரர் அவளை எச்சரிப்பது போல் சொல்லிச் சென்ற அந்தப் புதிர் போன்ற சொற்களின் நினைவோட்டம் தான் அது. ''இளங்கோப்பிச்சி! நீ என்ன சொல்கிறாய்? எனக்கு ஒன்றும் புரிய வில்லையே!'' என்று தவிப்புடன் கேட்டாள் அவள்.

துயரப் பெருமூச்சு விட்டு முகத்தை வேறு பக்கம் திருப்பிக்கொண்ட இளங்கோப்பிச்சி அடைத்த குரலில் சொன்னான்: ''ஆமாம், இளவரசி! தங்கள் மீதும், பல்லவ மன்னர்மீதும் வீணான விரோதக் குரோதம் கொண்டுள்ள சிலரால் இந்நாட்டிலே இப்போது ஒரு பெரும் கொந்தளிப்பு நிலை உருவாகியிருக்கிறது. அந்தக் கொந்தளிப்பின் அனல் வீச்சுப் பல்லவ நாட்டோடு நில்லாமல் பாண்டிய நாட்டிலும் புகுந்து, இதுவரை இவ்விரு நாடுகளுக்கிடையே நிலவி வந்த நல்லுறவு முறிந்து பகையையும் பூசலையும் தோற்றுவித்து விட்டிருக்கின்றன. இதற்கெல்லாம் அடிப்படைக் காரணம், பல்லவ மன்னர் தங்களைக் காதலிப்பதும், தங்களையே

திருமணம் செய்துகொள்ளப் போவதாக அவர் அறிவித்திருப்பதும்தான்.''

''சோழ குமாரியின் விளக்கம் வேடிக்கையாக இருக்கிறதே! பல்லவ நாட்டில் காதல் ஒரு குற்றமா? அல்லது காதலித்துக் கடிமணம் புரிந்து கொள்வதுதான் தவறு?''

''அப்படியல்ல, இளவரசி! தங்களிருவருக்குமிடையே யுள்ள சமய வேற்றுமைதான் தங்கள் காதலை வெட்டிப் பிளக்கக் கூடிய கோடரியாக இப்போது எழுந்து நிற்கிறது! இந்த எதிர்பாராத எதிர்ப்பின் காரணமாகவே, பல்லவ மாமன்னரின் வீராபிஷேக முடிசூட்டு விழாவும், தங்களுடைய திருமண வைபவமும் இதுவரை நடைபெறாமல் தடைப்பட்டு நிற்கின்றன. உங்கள் எதிர்கால இன்ப வாழ்க்கை பற்றிய இனிய கற்பனைகளில் மூழ்கி, இந்தச் சின்னஞ் சிறு இல்லத்தில் அடைந்து கிடப்பதாலேயே இதெல்லாம் உங்களுக்குத் தெரியாமல் இருக்கின்றன என்று நினைக்கிறேன். ஒருகால் இவ்வளவையும் தெரிந்துகொண்டு என்னதான் நடக்கிறதென்று பார்ப்போமே என்பதற்காக, ஏதும் தெரியாதவர்போல் பாவனை செய்து வருகிறீர்களோ என்றும் சந்தேகிக்கிறேன்.''

சண்டமாருதத்தில் சிக்கிக்கொண்ட பூங்கொடி போல் அலைப்புற்றுத் துவண்டு நின்ற உத்தமசீலியின் காயாம் பூக் கண்களில் அருவியெனக் கண்ணீர் வழிந்தது. அந்தச் சில விநாடிகளுக்குள் முன்னும் பின்னுமாகப் பல விஷயங்களை ஊகித்துக் கொண்டதால் ஏற்பட்ட பயம் அவளை மேலும் உலுக்கிக் குலுக்கியது. ஏதோ ஒன்றை நினைவு படுத்திக் கொண்டவளாய்த் திடுமென்று தலைநிமிர்ந்து, ''அது சரி, இளங்கோப் பிச்சி! எங்களுக்கு எதிராக யாரோ சிலர் சேர்ந்து இத்தகைய கொந்தளிப்பை உருவாக்கி வருவதாகச் சொன்னாயே, அந்தச் 'சிலர்' என்பவர் யார்?'' என்று ஆக்கிரம் செருமிய குரலில் கேட்டாள்.

இளங்கோப்பிச்சியின் முகம் இந்த ஒரே விநாடியில் பிரேதக் களை பெற்று வெளுத்துச் சிறுத்து விட்டது. தீயின் மேல் நிற்பவள் போல் தவித்துத் தடுமாறினாள் அவள்.

''ஏன் தயங்குகிறாய்? அந்த விஷமக்காரர்களை வெளிப்படுத்த உனக்கு ஏன் இவ்வளவு தயக்கம்?'' என்று மீண்டும் படபடப்பாக வினவினாள் உத்தமசீலி.

மிரட்சியுடன் சுற்றுமுற்றும் பார்த்த இளங்கோப்பிச்சி, ''அவர்கள்....... அவர்கள்...... என்னைச் சார்ந்தவர்கள் தான்! எனக்குச் சொந்தமானவர்கள் தான், இளவரசி!'' என்று திக்கித் திணறினாள்.

திடுக்குற்றுப் பின்னால் நகர்ந்த உத்தமசீலி, ''என்ன? எங்களுக்கு எதிரான நடவடிக்கையில் ஈடுபட்டிருப்பவர்கள் உன்னைச் சார்ந்தவர்களா ?'' என்று வியப்பேறிய குரலில் வினவினாள்.

''ஆம், இளவரசி! பல்லவ மாமன்னரின் பேரன்புக்கு உரியவர்களாயிருந்த பழையாறைச் சோழரும், கோவிந்தவர்மரும்தான் அந்தக் கொந்தளிப்புச் சூழ்நிலையை இப்போது உருவாக்கி வருகிறார்கள்!'' என்று தாள முடியாத அவமானத்துடன் முணுமுணுத்தாள். இளங்கோப்பிச்சி.

## அத்தியாயம் முப்பத்தாறு

# இரு மனம்

உத்தமசீலி கலகலவென நகைத்தாள். ''நல்ல நாடகம்! மிக நல்ல நாடகம் இது!'' என்று கூறி மீண்டும் சிரித்த அவள் அலட்சிய மிடுக்குடன் நிமிர்ந்து குறும்பும் குத்தலுமாக, ''சோழகுமாரி! உன்னுடைய நடிப்பு அபாரமானது! நீ நடத்தி வரும் நாடகமோ அதைவிட அற்புதமானது! ஆனால் இதையெல்லாம் கண்டு நான் ஏமாந்து விடுவேன் என்றுமட்டும் உன் கனவிலும் கருதாதே!'' என்றாள் சீற்றத்துடன்.

இளங்கோப்பிச்சியின் உடல் தடதடவென ஆடியது. ''இளவரசி!......'' என்று வாய்குழற இழுத்தாள் அவள்.

''எனக்குத் தெரியும். நீ எப்பேர்ப்பட்டவள் என்பது எனக்கு நன்றாகத் தெரியும்.''

''அவசரப்படாதீர்கள், இளவரசி!'' என்றாள் இளங்கோப்பிச்சி.

''இல்லை, சோழகுமாரி! நிதானமாகத்தான் பேசுகிறேன். நான் நினைத்தது சரியாகவே ஆகிவிட்டது. திடீரென்று என்னை நீ காண வந்த போதே சிறிதளவு சந்தேகப்பட்டேன். பிறகு என்னுடன் தங்கியிருக்கப் போவதாகச் சொன்ன போதும், அதற்கான காரணத்தைப் பல முறை கேட்டும்கூடச் சரியான பதில் சொல்லாமல் மழுப்பிய போதும் அந்தச் சந்தேகம் வளர்ந்தது. அப்புறம் அடிக்கடி நீ வெளியே போய் வருவதைப் பார்த்தபோது மேலும் என் சந்தேகம் வலுவடைந்தது. அவையெல்லாமாகச் சேர்ந்து இன்று உண்மை வெளிப்பட்டு விட்டது.''

> சமய வாழ்வு வாழ விரும்புபவனுக்கு வேறெது இருப்பினும் 'மனத்தளர்ச்சி உதவவே உதவாது. எப்போதும் இனிமையோடு புன்னகையுடன் இருப்பதென்பது பிரார்த்தனையைக் காட்டிலும் சிறப்பான முறையில் ஒருவனை ஆண்டவனின் அண்மையில் சேர்க்கும். - ஸ்வாமி விவேகானந்தர்

''வேண்டாம், இளவரசி! என்மீது வீண் பழி சுமத்தாதீர்கள்!''

''உன்மீது நான் ஏன் பழி சுமத்த வேண்டும்? என்மேல் கொண்ட பழைய வஞ்சத்தைத் தீர்த்துக் கொள்ள முயல்கிறாய்! உன்னைப் பொறுத்த வரையில் அது நியாயம்தானே? உன் நோக்கம் என்ன என்பதை நான் அறிவேன். அதிகார ஆள் பலத்தோடு இந்த நாட்டுக்கு நான் வந்தபோது, என்னால் நீ அடைய நேரிட்ட கஷ்ட நஷ்டங்களுக்கும், அவமானத்துக்கும் சேர்த்து என்னைப் பழி வாங்க வேண்டும் என்பதுதான் உன்னுடைய நோக்கம். அதற்காகவே இத்தனை நாள் என்னுடன் வந்து வஞ்சகமாகத் தங்கியிருக்கிறாய். ஏதேதோ சூழ்ச்சி செய்து அதன் இறுதி அஸ்திரமாக இந்தப் பொய்க் கூற்றை இப்போது பிரயோகிக்கிறாய். இல்லாத பொல்லாத தகவல்களைச் சொல்லி என்னைப் பயமுறுத்தி இந்த நாட்டை விட்டே விரட்டியடிக்கப் பார்க்கிறாய். நான் ஏமாற மாட்டேன்.''

வேர்த்து விறுவிறுத்து நின்ற இளங்கோப்பிச்சி வேதனைப் பொருமலுடன் சிரித்தாள். ''ஒரு மாபெரும் தேசத்து மன்னரின் இதயத்தைக் கவர்ந்தவரான உங்களை இந்த விதமாக ஏமாற்றிப் பழி வாங்கிவிட முடியும் என்று பச்சைக் குழந்தைகூட நினைக்காது. என் மேல்தான் உங்களுக்கு நம்பிக்கை இல்லை. சமண சங்கத் தலைவர் வந்து உங்களிடம் என்ன சொல்லி விட்டுப் போனார்? அதையாவது சற்று சிந்தித்துப் பாருங்களேன்?''

உத்தமசீலியின் முகத்தில் சட்டென்று ஒரு மாறுதல் ஏற்பட்டது. உதட்டைக் கடித்துக்கொண்டு சிறுபொழுது மௌனமாயிருந்த அவள், ''அப்படியானால் நீ சொல்வதெல்லாம் உண்மைதானா, இளங்கோப்பிச்சி?'' என்று நடுக்கத்துடன் கேட்டாள்.

''நான் சொல்வது அவ்வளவும் உண்மை என்றே நம்புங்கள், இளவரசி!''

''பெற்று வளர்த்த தந்தைக்கு விரோதமாகவும், உயிருக்குயிராக நேசிக்கும் காதலனுக்கு எதிராகவும் பேசும் உன்னையா நம்பச் சொல்கிறாய்?''

''நியாயத்துக்கும், தர்மத்துக்கும், சத்தியத்துக்கும் அஞ்சி நடக்கும் ஒரு பெண்ணால் அப்படிப் பேச முடியும் என்பதையும் நம்புங்கள், இளவரசி!''

ஆச்சரியத்துடன் கண்களை மலர்த்தி அவளை வெறித்து நோக்கிய உத்தமசீலி, ''என் பக்கம் நியாயம் இருக்கிறது என்பதற்காகத்தான் என்னுடன் வந்து தங்கியிருக்கிறாயோ?'' என்று கேட்டாள்.

''அது மட்டுமல்ல, இளவரசி! அவர்களால் உங்கள் உயிருக்கு ஆபத்து நேரலாம் என்பதை அறிந்தே உங்களுக்குப் பாதுகாப்பாக இங்கு வந்து தங்கியிருக்கிறேன்! இதில் சந்தேகமிருந்தால் நமது படுக்கையறைக்குப் போய் என் மஞ்சத்தின் பட்டு மெத்தையை எடுத்துவிட்டுப் பாருங்கள்; அங்கே ஒரு நீண்ட வாளை நான் மறைத்து வைத்திருப்பதைக் காண்பீர்கள்!''

உத்தமசீலியின் பூவுடல் ஒரு குலுங்குக் குலுங்கியது. பயப்பிராந்தியுடன் அவளைப் பார்த்துக்கொண்டே பின்னால் நகர்ந்தாள் அவள்.

இளங்கோப்பிச்சியின் கண்கள் கலங்கிக் குளமாயின. உதட்டை மடித்துக் கடித்துத் தன் உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டு மிகவும் நிதானமாகச் சொன்னாள்: ''இவ்வளவுக்கும் காரணம் என் சுயநலம்தான், இளவரசி! பரமேசுவர வர்மர் உங்கள் கரம் பற்றினால்தான் நானும் என் காதலர் கோவிந்தவர்மரின் கரம் பற்ற முடியும். பல்லவ மன்னரின் காதல் தோல்விக்கு அவரது தம்பியே காரணமாயிருந்து விட்டால், அவ்விருவருக்குமிடையே பகையும் பிளவும் ஏற்படலாம்; அதனால் என் காதலை மட்டுமல்ல, எனது காதலரையே இழக்கும்படியான துர்ப்பாக்கியமும் நேரிடலாம். அத்தகைய விபரீத சோதனையிலிருந்து என்னைக் காப்பாற்றிக் கொள்ளும் சுயநல நோக்கத்தோடுதான், உங்களையும் உங்கள் காதலையும் காப்பாற்றி வெற்றி பெற வைக்க வேண்டுமென்று மனப்பூர்வமாக விரும்பி, அவற்றுக்கான முயற்சியில் ஈடுபட இங்கு வந்தேன். ஆனால், என்னுடைய அந்த நம்பிக்கை இப்போது தளர்ந்து விட்டது. என் முயற்சியில் வெற்றி பெற முடியாத அளவுக்கு நிலைமை மோசமடைந்து போய் விட்டது....''

இதற்கு மேல் பேச முடியாமல் தொண்டை அடைத்துக் கொள்ளப் பொருமியழுது விட்டாள் இளங்கோப்பிச்சி.

(தொடரும்)

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.



துள்ளி
விளையாடும்
பொழுதோ



ஓய்வு பெறும்
பொழுதோ...
அவர்கள்
எப்பொழுதும்
வளர்ந்து
கொண்டே
இருக்கிறார்
கள்!



# கல்ஸாஞ-டி

**வைட்டமின் நிறைச் சேர்க்கையுடைய கால்சியம்**

கர்ப்பிணிகள், குழந்தைகளை அரவணைக்கும் அன்னைகள்
மற்றும் வளரும் குழந்தைகள் இவர்களுக்கு ஏற்றது

குழந்தைப்பருவம் வேகமாக வளரும் பருவம். மற்றெல்லா காலத்தையும்விட—இப்பொழுது வலிமை பொருந்திய பற்களையும், எலும்புகளையும் வளர்க்கவும்,......வாழ்க்கைக்கு வேண்டிய வலிமையையும் சக்தியையும் பெறவும், குழந்தைகளுக்கு கல்ஸாஞ-டி தேவைப்படுகிறது. எனவேதான் வளர்ச்சிபெறும் இந்த வருஷங்களில், உங்கள் குழந்தைகளுக்கு நீங்கள் கல்ஸாஞ-டி-யைக் கொடுக்கவேண்டும். தரக்கையுமிக்க கல்ஸாஞ-டி, தூய்மையான கால்சியமாகும். வியாதிக் கிருமிகளினால் பாதிக்கப்படாதிருப்பதற்கும்......... கால்சியம் சத்து நன்கு உடலில் சேர்வதற்கும்........மிகுந்த வலிமை பெறுவதற்கும்... இதில் வைட்டமின்கள் சேர்க்கப்பட்டுள்ளன உங்கள் குழந்தைகளுக்கு கல்ஸாஞ-டி-யைக் கொடுத்துப்பாருங்கள் அவர்கள் புதுச் சக்தியுடனும் புதுமலர்ச்சியுடனும் தோற்றமளிப்பார்கள்

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

# ஆதரவுக்கு ஆதரவான
# அன்னைக்கு ஆதரவு: டால்டா

## டால்டா
பேரீச்ச மர அடையாளமிட்ட
வனஸ்பதி




■ தரத்திலுயர்ந்த தாவர எண்ணெய்களிலிருந்து தயாரிப்பு.
■ வளரும் சிறுவர்களுக்கான வைட்டமின்கள் அடங்கியது.
■ மோசடி செய்யமுடியாதவாறு சீல் வைத்த டப்பாக்களில் சுகாதார முறைப்படி அடக்கமானது.
■ மறவாதீர்கள்: திறந்த டப்பாக்களிலிருந்து சில்லறையாக வாங்கக் கூடியதல்ல டால்டா.

## தரத்திலும் தூய்மையிலும் சிறந்த சமையல் சாதனம்

DL. 97-140 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு